# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு



சிலம்பு 15 தாது-பங்குனி 1937 பரல் 8

# பொருளடக்கம்



---



சீகன்பால்கு ஐயர்

(௧௬௮௫—௧௭௧௯)

[முதன் முதல் தமிழ் அச்சு எழுத்துக்களைக் கொணர்ந்தவர்.]




சிலம்பு-கடு] தாது—பங்குனி [பரல்-௮

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

### திருநல்லூர்ப் பெருமணம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே.

பதவுரை:—

நல்லூர்ப் பெருமணம் மேய நம்பானே—திருநல்லூர்ப் பெருமணம் என்ற திருப்பதியில் திருக்கோயில் கொண்டருளியிருக்கின்ற சிவபெருமானே

கல்லூர்ப் பெருமணம் வேண்டா—மணமகன், மணமகளுடைய காலைக் கல்லின்மேல் வைத்துச் செய்யப்படுவதாகிய சடங்கோடு கூடிய பெரியமணத்தினலாவதாகிய இல்லறவாழ்க்கை எனக்கு வேண்டா

கழுமலம் பல்ஊர் பெருமணம் பாட்டு மெய் ஆய்த்தில—(நான் உலகில் இல்லறவாழ்க்கையில் வாழ்வேனுயின்) திருக்கழுமலம் முதலிய பல தலங்களில் நான்பாடியதேவாரப்பாட்டுக்களின் கருத்துக்கள் (எனது இல்லறவொழுக்கத்துக்கு மாருயிருக்குமாதலால்) உண்மையாகாமற் போய்விடும் (அதாவது உண்மை என்று உலகினரால் நினைக்கப்படாமற் போய்விடும்.)

தொண்டர் சொல் ஊர்பெருமணம் சூடலர்—அங்ஙனம் தேவாரப் பாட்டுக்களின் கருத்துக்கள் உண்மை என்று உலகினரால் நினைக்கப்படாதிருத்தில்பற்றி துறவறவொழுக்கம் பூண்டொழுகும் சிவத்தொண்டர்கள் அத்தேவாரப்பாட்டுக்களை மேன்மை

யாகத் தலைமேற்கொண்டு ஓதிப் பொருளுணர்ந்து அவற்றால் விளையும் பேரின்பச்சுவையை நுகரமாட்டார். ஆதலின் நான் இந்த உலகிற் பிறந்து சிவபெருமானால் ஆண்டருளப்பெற்று சிவத்தலங்கள்தோறும் போய்த் தேவாரம்பாடிய சிவத்தொண்டும் பிறதொண்டுகளும் மக்களுக்கு நான் எண்ணுகிற நற்பயன்களை விளைக்காமற்போகும் என்பது குறிப்பெச்சம்.

திருஞான சம்பந்த அடிகள் மணப்பருவமடைந்தபொழுது அவருடைய தந்தையார் சிவபாத இருதயரும் சுற்றத்தாரும் பிறரும் அவரை அறுதொழிலின் வைதிகமாநெறி ஒழுக்கம் உலகிற்குக் காட்டவேண்டி ஒரு கன்னியை மணஞ்செய்தருளல் வேண்டுமென்று கேட்டனர். அடிகள் அதற்கு முதலாவது இசையாது மறுத்துப் பின் மணஞ்செய்தற்கு இசைந்தருளினார். தந்தையார் முதலிய மறையோர், அடிகளுக்கு மணஞ்செய்ய வேண்டி திருநல்லூர்ப்பெருமணம் நம்பாண்டார்நம்பி மகளைக் கேட்டு நம்பாண்டார் நம்பியும் இசைந்தருளினார். பின் நல்லோரையோடு கூடிய ஒரு மணத்திருநாள் குறிப்பிட்டு மறையோர் அடிகளைச் சீகாழியிலிருந்து கூட்டிக்கொண்டு திருநல்லூர்ப் பெருமணத்தில் மணமகள் மனைக்குச் சென்றனர். அடிகள் மணப்பந்தலுக்கு முன் வளர்க்கப்பட்ட எரியை மணமகளைக் கையிற்பிடித்துக்கொண்டு வலம்வரும்பொழுது விருப்புறு மங்கையாவார், விடையுயர்த்த சிவபெருமானே என்று சிந்தையில் நினைந்து இந்த இல்லொழுக்கம வந்து சேர்ந்ததே இவளோடுஞ் சிவன்தான் சேர்வன் என்ற கருத்துடையவராய்த் திருநல்லூர்ப் பெருமணம் சிவபெருமானைப் பாடிய பதிகத்தின் முதற்பாட்டு இது.

விளக்க உரை:—

நல்லூர்ப்பெருமணம் மேய நம்பானே—மேவிய என்றசொல் மேய என இடைக்குறைந்து நின்றது. நம்பானே என்பதின் ஈற்றிலுள்ள ஏகாரம் விளிவேற்றுமை உருபு. நம்பான்—சிவபெருமான். பெருமணம் என்பது திருநல்லூரிலுள்ள திருக்கோயிலின் பெயர்.

கல்லூர்ப்பெருமணம் வேண்டா—அம்மிமிதித்தலும் அருந்ததிபார்த்தலும் ஆகிய மணச்சடங்குகள் மணப்பந்தலின்முன் வளர்க்கப்படுகிற வேள்வித் தீயை வலம்வரும்பொழுது மணமகள் கற்புநெறியை வற்புறுத்துதற்குத் தமிழ்நாட்டு மக்களால் இன்றுஞ் செய்யப்படுகின்றன. "மங்கலம் புனைந்த செம்பொன் அம்மி

மேல் மணுட்டிபாத—பங்கயமலரைக் கையால் பரிபுரஞ் சிலம் பப்பற்றி—புங்கவன் மனுவாலேத்திப் புண்ணிய வசிட்டன் தேவி—எங்கெனச் செங்கைகூப்பி யெதிர்வர வருட்கண் சாத்தி" என்று பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் திரு மணப்படலம் 188-வது பாட்டுக் கூறுதல் காண்க.

ஓர் ஆண்மகனும் ஒரு பெண்மகளும் ஈருடலோருயிர்போல் வாழ்ந்து உலகில் நல்லறஞ்செய்யப் பெறும் இல்லற வாழ்க்கையைக் கூட்டுவிக்கு மணம் ஆதலின் அடிகள் அம் மணத்தைப் பெரு மணம் என்றார். பெருமணம் என்பது நல்லறஞ் செய்யு மேம் பாடுடைய மணம். "வையகம் போற்றுஞ் செய்கை மனை அறம் புரிந்து வாழ்வார்" என்று சேக்கிழார் திருநீலகண்ட நாய னார் புராணம் 2-வதுபாட்டிற் கூறுதல் காண்க.

வேண்டா என்ற சொல் ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாய் வரும். வேண்டும் என்ற உடன்பாட்டுச் சொல்லின் எதிர்மறை வினை, வேண்டாம் என்று சாதாரணமாய் உலகவழக்கில் வழங் கப்படுகின்றது. உரையாசிரியர் நச்சினார்க்கினியர் 'வேண்டா' என்ற சொல்லையே பல விடங்களில் வழங்குகின்றனர்.

கழுமலம் பல் ஊர்ப்பெருமணம் பாட்டு மெய் ஆய்த்தில—பெரு மணம் என்ற சொல் இங்கே அடிகள் பாடிய தேவாரங்களைக் குறிக்கிறது. தேவாரங்கள் அவற்றை அன்புடனினைந்து ஓதுகிறவர்களிடம் சிவமணமாகிய திருவருளை விளங்கும்படி செய்தலால் 'பெருமணம்' என்றார். "ஆறதேறுஞ் சடையான ருள் மேவவணியர்க்கு வீறதேறுந் தமிழால் வழிகண்டவன்." என்று நம்பியாண்டார் நம்பி தாம்பாடிய திருச்சண்பை விருத்தம் 5-வது பாட்டில் அடிகளுடைய தேவாரங்களைப்பற்றிக் கூறுதல் காண்க. பாட்டு என்பது சாதி ஒருமைப்பெயராய்ப் பாட்டுக் களைக் குறிக்கிறது.

ஆய்த்தில என்ற சொல் ஆயிற்றில என்றசொல்லின் மரூஉ. ஆயிற்றில என்பது ஆயித்தில என மருவிப் பின் ஆயித்தில என்பது ஆய்த் தில என மருவியது. தெளிவுபற்றி அது ஆய்த்தில என இறந்த காலத்தாற் கூறப்பட்டது. மெய் ஆய்த்தில—மெய் ஆகமாட்டா, அதாவது, உண்மை என்று தேவாரங்களை ஓதுகிறவர்களால் நினைக்கப்படா. அங்ஙனம் அவர்களால் நினைக்கப்படாதிருத் தற்குக் காரணம் எனது இல்லறவொழுக்கம் நான் பாடிய பல தேவாரப்பாட்டுக்களின் கருத்துக்களுக்கு மாறாயிருத்தல் ஆகும்.

அப்பாட்டுக்களிற் சில அடியில் வருவன:—

1. "சுருவைக்கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகுமலர் கொடுவந்து மையேத்துது நாமடியோம்."
—சம்பந்தர் தேவாரம் கழகப்பதிப்பு 116—8.

2. "சோற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடியே அடைந்தோம்"
—ஷை 116—5.

3. பிறவியால் வருவன கேடுளவாதலாற் பெரியவின்பத்
துறவியார்க்கல்லது துன்ப நீங்காதேனத் தூங்கினுயே.
—ஷை 215—5.

4. தந்தை தாய் தன்னுடன்றோன்றினுர் புத்திரர்தாரமென்னும்
பந்த நீங்காதவர்க் குய்ந்துபோக்கில் லெனப்பற்றினுயே.
—ஷை 215—9.

மேலே கூறப்பட்ட முன் இரண்டு தேவாரப்பாட்டுக்களும் அடிகள் உலகவாழ்க்கை வொழுக்கத்தைத் துறந்து சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்ந்ததாகக் கூறுகின்றன. பின் இரண்டு தேவாரப் பாட்டுக்களும் உலகப்பற்று நீங்கித் துறவறவொழுக்கம் பூண்டவரே பேரின்ப மெய்தப்பெறுவர் என்று கூறுகின்றன. தாம் உலகில் இல்லற ஒழுக்கி லொழுகுதற்கு நேரே மாருக இந்தத் தேவாரப்பாட்டுக் களின் கருத்துக்களிருத்தலால் அக்கருத்துக்கள் உண்மை அல்ல என்று உலகினராற் கருதப்படும் என்பதுபற்றி அடிகள் 'கழுமலம் பல்லூர்ப்பெருமணம் பாட்டு மெய்யாய்த்தில' என்ருர். இதனை நினைந்து அடிகள் தாம் மணமகளைக் கைப்பற்றி வேள்வித்தீயை வலம் வரும்பொழுது "இந்த இல்லொழுக்கு வந்து சேர்ந்ததே" என்ருர். இப்பிறவிக்கு முன் அடிகள் அடைந்திருந்த சாமுசித்தத்தன்மை நிலையிலும், பிறந்த பின் சிவபெருமானு லாட்கொள்ளப்பெற்று உணர் வரிய மெய்ஞ்ஞானம் பெற்ற நிலையிலும் "சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுஞ் சர்வசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள் வாக்கு முடிகவித் தரசாண்டரிவையரோடனுபவித் தங்கிருந்திடினு மகப்பற்றற்றிருப் பார்" என்று சிவஞானசித்தியார் கூறுகிறபடி அடிகள் மக்களொழுக்கத் துக்கு எடுத்துக்காட்டாக இல்லறவாழ்விலே இருவகைப்பற்றுக்களு மின்றித் துறவறவொழுக்கம் பூண்டொழுகவல்லர். ஆனல் இவ்வுண் மையை உலகினர் அறியவல்லுநர் அல்லராதலின் தேவாரப்பாட்டுக் கருத்துக்கள் அவர்களால் உண்மையாகக் கொள்ளப்படமாட்டா என்று அடிகள் கூறுகின்ருர்.

தொண்டர் சொல் ஊர்ப்பெருமணம் சூடலர்—தொண்டராவார் உலகப்பற்றுடைய இல்லறவொழுக்கத்தினை நீத்துத் துறவற

வொழுக்க மேற்கொண்டு பேரின்பமடைதற்கு வேண்டப்படும் மெய்யறிவைப் பெறுதற்கு நற்றவங்கள் பழகிக்கொண்டு திருக்கோயில்களிலும் பிற இடங்களிலும் பயன் கருதாத சிவத்தொண்டுகள் செய்துகொண்டிருப்பவர்கள்.

"உள்ளமோ ரிச்சையினு லுகந்தேத்தித் தொழுமின் றொண்டர்" என்று அடிகளும் (105—3) "துறவிநெஞ்சினராகிய தொண்டர்காள்" என்று திருநாவுக்கரசு அடிகளும் (136—6) தேவாரங்களிற் கூறுதல் காண்க.

சூடல் என்பது பூக்கள் முதலிய இனிய பொருள்களைத் தலைமேல் அணிதல். அது இங்கே தேவாரப்பாட்டுக்களிற் கூறப்பட்ட உண்மைகளை உள்ளமுவந்து மேன்மையுடையனவாக நினைத்து அவற்றின் வழி ஒழுகுதலைக் குறிக்கிறது—சிவப்பணி செய்யும் தொண்டர்கள் அடிகள்பாடிய தேவாரப்பாட்டுக்களின் கருத்துக்கள் அவர் உலகிலொழுகிக்காட்டும் இல்லறவொழுக்கத்துக்கு மாறுயிருத்தலை நினைந்து அவற்றை உண்மையாகக்கொண்டு அவற்றின் வழியொழுகி நற்பயனடையமாட்டார்கள் என்ற கருத்தை அடிகள் 'தொண்டர் சொல்லூர்ப் பெருமணஞ் சூடலர்' என்றுர்.

'பெருமணம்' என்பது இங்கே தேவாரப்பாட்டுக்களிலடங்கியுள்ள சைவசித்தாந்த உண்மைகளைக் குறிக்கிறது. அவ்வுண்மைகள் வீடுபேறு ஆகிய பெரும்பயனைத் தருதலால் 'பெருமணம்' என்றும் அவை பூவின் மணம்போலச் சொற்களாலே பெறப்படுதலால் 'சொல்லூர்ப் பெருமணம்' என்றும் 'அடிகள் கூறினர். "சொற்பாவு பொருடெரிந்து தூய்மை நோக்கித் தூங்காதார் மனத்திருளை வாங்காதானை" என்று (281—2) திருநாவுக்கரசு அடிகள்கூறுதல் காண்க. தொண்டர்களும் உலகிலுள்ள இல்வாழ்வாரும் தாம்பாடிய தேவாரங்களிலடங்கியிருக்கிற உண்மைகளின் வழி ஒழுகி நற்பெரும்பயன் அடையமாட்டார் ஆதலின், அடிகள் தாம் உலகில் பிறந்து தேவாரம்பாடிய தொண்டு செய்ததனுல் வரும் பிற்கால நற்பயன் தாம் இல்லறவொழுக்கி லொழுகினுல் இல்லாமற்போகும் என்பது அடிகள் கருத்து.

அடிகள் உலகிற் பிறந்தது சிவத்தொண்டு செய்தற்காகவே என்பது அவர் பாடிய திருத்துருத்தித் தேவாரப்பதிகம் 5-வது பாட்டால் (234—5) நன்குபுலனும். அது அடியில் வருமாறு:—

துறக்குமா சொலப்படாய்து ருத்தியாய் திருந்தடி
மறக்குமாறி லாதவென்னை மையல்செய்திம் மண்ணின்மேற்
பிறக்குமாறு காட்டினுய் பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினுய்க் கிழுக்குகின்ற தென்னையே.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## தமிழ் யாப்பிலக்கண நூல்கள்

[வித்வான் மா. இராசமாணிக்கம் அவர்கள் P. O. L.]

(முன் ௩௨௬-ஆம் பக்கத் தொடர்ச்சி)

வடமொழி தமிழகத்திற் பலப்பட்டது சமணராலும் பௌத்தராலும் வடமொழிப் பண்டிதராலுமே என்பதை அனைவரும் ஒப்புவர். பாண்டிய நாட்டில் களப்பிரர் ஆட்சிக் காலத்தும், தொண்டை சோழ நாடுகளில் பல்லவர் காலத்துமே வடமொழி நடம்புரியலாயிற்று. இதற்குப் பல்லவர் வடமொழிச் சாஸனங்களே சான்று பகரும். பல்லவர் காலத்தில் காஞ்சிபுரமும் கோயில்களும் வடமொழிக்கு நிலைக் களங்களாக இருந்தன என்பதை எவரே அறியார்? கி. பி. 5-ம் நூற்றாண்டில் மதுரையில் களப்பிரர் காலத்தில் 'சமணர் சங்கம்' ஒன்று கூடியது என்பது சரித்திர வாயிலாக உணர்கிறோம். சமணர் வடமொழிப் பண்டிதர். அவரும் வைதிக மதத்தினரும் பௌத்தரும் 'வடநூல்வழித் தமிழாசிரியர்' எனப்பட்டனர். அக்காலத்தில் கி. பி. 3 முதல் 12-ம் நூற்றாண்டு முடிய ஏறக்குறைய சமணம், பௌத்தம், வைதிக மதம் இவை ஒன்றோடொன்று போரிட்டுவந்தன. சமணர் செல்வாக்கு உயர்ந்திருந்த 3, 4, 5, 6-ம் நூற்றாண்டுகளில் பல வடமொழி தழுவிய தமிழ் நூல்கள் வெளிவந்தன. அவையே நாலடியார், சிந்தாமணி முதலியன. அக்காலத்தே தான் மேற் கூறப்பெற்ற நான்காந்தர இலக்கண நூல்கள் வெளிவந்திருத்தல் வேண்டும். அவற்றை 'நான்காம் சங்க கால நூல்கள்' எனினும் பொருந்தும்.

தமிழகத்தின் நிலை குலைந்த 3, 4, 5, 6-ம் நூற்றாண்டுகளில் சேர சோழ பாண்டியர் ஆட்சி ஒழிந்து பல்லவர் ஆட்சியும் களப்பிரர் ஆட்சியும் வலுப்பெற்றிருந்த அக்காலத்தில்*—சமணர் மதப்பிரசாரம் உச்ச நிலையில் இருந்த அக்காலத்தில்—மூவேந்தர் வலிகுன்றி அடிமைப்பட்டுக் கிடந்த அந்த இருண்ட காலத்தில்—தூய தமிழ் நூல்கள் வெளிவந்தன; அவற்றுள்ளும் இலக்கண நூல்கள் வந்தன எனக் கூறுதல்

* Vide Dr. S. Krishnaswamy Iyengar's valuable Introduction to 'The Pallavas of Kanchi' by R. Gopalan.

முற்றும் அசம்பாவிதமே யாகும். அக்காலத்தே மொழி பெயர்ப்பு நூல்களே வெளியிடப்பெற்றன. மதச் சண்டை நடந்த பிற்காலத்தும் (7, 8, 9, 10-ம் நூற்றாண்டுகளிலும்) தேவார திருவாசகம் போன்ற மத நூல்கள் வெளிப்பட்டன; 'யாப்பருங்கலம்' போன்ற சமணரை ஆசிரியராகக்கொண்ட 'சார்பு நூல்கள்' இரண்டொன்று பின்னர் வெளி வந்தனவே யன்றி, வேறில்லை. எனவே கி. பி. 3-ம் நூற்றாண்டிலிருந்து 10-ம் நூற்றாண்டு முடிய, செயல் முறை முதல் நக்கீரர் நாலடி நாற்பது ஈறாகவுள்ள இலக்கண நூல்கள் வெளிவந்திருத்தல் இயலாதென்பது வெள்ளிடை மலை. மேலும் கடைச்சங்கத்தின் இறுதிக்காலம் கி. பி. 2-ம் நூற்றாண்டின் இறுதியோடு முடிந்து விடுதல் † சரித்திரங்கொண்டு காண்க.

'சங்கம்' என்ற சொல் 'பௌத்தர்' அல்லது 'சமணர்' இடத்திலிருந்தே தமிழர் கொண்டிருத்தல் கூடும். முதல்-இடைச்சங்கங்கட்குக் 'கழகம்' போன்ற சொல் ஏதேனும் வழங்கியிருத்தல் கூடும். கடைச்சங்க காலத்தில் 'சங்கம்' என்ற சொல் தமிழகத்தில் பௌத்தராலும் சமணராலும் வழங்கப்பட்டிருக்கலாம். அதிலிருந்து அச்சொல் வழக்காறு பெற்று, களவியல் உரையிலும், சின்னமனூர்ப் பெரிய சாஸனத்தும், இளம்பூரணர் போன்றவர் உரைகளிலும் வழங்கலாயின; எனவே, 'சங்கம்' என்னும் சொல் கடைச்சங்க காலத்திலோ அதற்குப் பின்னரோ இருந்தே (தமிழ்ச்) சங்கத்துக்கு வழங்கியதாதல் வேண்டும். ஆதலின், 'சங்கயாப்பு' என்னும் பெயர்கொண்ட யாப்புநூல் கடைச் சங்கத்தது அல்லது அதற்குப் பிற்பட்டதாதல் வேண்டும். அது ஜைனர் கூட்டிய நான்காம் சங்ககாலத்தில் செய்யப் பெற்றதாக இருத்தலும் கூடும். அதற்கும் பிற்பட்ட காலத்திற்றான் மாபுராணமும் செய்யப் பெற்றதாதல் வேண்டும். என்னை?

முதல்—இடை—கடைச்சங்க நூல்களில் 'புராணம்' என்னும் பெயருடன் இலக்கண நூலோ, இலக்கிய நூலோ இருந்ததில்லை—இருந்திருத்தலும் இயலாது, 'புராணம்' என்ற சொல்லே வடசொல் ஆதலின் என்க. மேலும், யா. வி. உரையாளர், சந்தம் தாண்டகம் பற்றிய உரையில், "நான்கடி ஒத்து வருவனவும், நான்கடியும் ஒவ்வாது வருவனவும்,...... பிறவாற்றால்வருவனவும்—மாராச்சையும்........முதலாகிய சாந்தோபிசிதிகள் உள்ளும் பாட்டியல் மரபு, மாபுராணம் முதலாகிய தமிழ்நூல் உள்ளும் புகுதியுடையார் வாய்க்கேட்டுணர்க" (யா. வி. பக். 474) எனவும், "......இவற்றை எல்லாம்

† Vide Dr. S. K. Iyengar's Introduction to his 'Manimekalai'

சரணுச்சிரையமும் சயதேவமும்.........குணகாங்கி என்னும் கருநாடகச் சந்தமும் [1], வாஞ்சியார் செய்த வடுகச்சந்தமும் [2] ஆகியவற்றுள்ளும்; மாபுராணம் முதலாய தமிழ் நூலுள்ளும் புகுதியுடையார்வாய்க் கேட்டுணர்க'' (யா. வி. பக். 514) எனவும் வருவனவே மாபுராணத்தின் காலம் மிகப் பிற்பட்டதென்ற முடிவை உறுதிப்படுத்தப் போதியது. இப்பிற பாஷை நூல்களோடு மாபுராணத்தைப் புணர்த்துக் கூறியதிலிருந்தே மாபுராணத்தின் காலம் குறைந்தது கி. பி. 6-ம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதுதான் எனத்துணிந்து கூறலாம். மேலும், சந்தம் தாண்டகம் எனத் தொல்காப்பியர் எதனையுங் கொண்டிலர்; இனமுங் கொண்டாரில்லை. யாவற்றையும் கொச்சகக்கலியுள் அடக்கினர். எனவே, அவர்க்கு முற்பட்டதாக மாபுராணம் (களவியல் கூறுமாப்போல) இருப்பின், சந்தம், தாண்டகம் எனத் தனித் தனியாகவும், பல்வேறு விகற்பங்களோடும் இலக்கணம் வகுத்துக் கூறியிருத்தல் இயலுமா? சந்தமும் தாண்டகமும் பெருகிவழிந்த காலத்தேதான் அவற்றின் இலட்சணமும் விகற்பங்களும் மல்கியிருத்தல் வேண்டும். தமிழகத்தில் சந்தம், தாண்டகம் என்பவை தோன்றி வேரூன்றிய காலம் அப்பர் காலத்திருந்தே (கி. பி. 7-ம் நூற்றாண்டு) என்பதை மறுப்பார் எவர்? மேலும், இத்துணை வடநூல்களோடு ஒப்பிடக்கூடிய இலட்சணங்களையும் விகற்பங்களையும் பெற்றிருக்கக்கூடிய காலம் இதற்கு முந்தியதாயிருத்தலும் இயலாதன்றோ? ஆகவே, மாபுராணம் கி. பி 7, 8, 9-ம் நூற்றாண்டுகளில் செயப்பெற்றதாதல் வேண்டும். அது களவியல் உரைக்கு முற்பட்டது. அதன் பெயரைக் கண்டு மயங்கியோ, அக்காலத்தவர் தயவைப் பெற விழைந்தோ மாபுராணத்தை முதற்சங்க வரிசையிற் கூறினர் களவியல் உரையாளர். இதைப் போன்றதே பூதபுராணமும் கால அளவில். பாட்டியல் மரபும் அக்காலத்ததே. பாட்டியல் நூல்கள் பல, சமணரால் செய்யப்பெற்றவை என்பதைத் தமிழ்ப் புலவர் நன்குணர்வர். மேலும், சமண நூலாக 'மகாபுராணம்' என ஒன்று இருந்ததாகத் தெரிகிறது. அம் மகாபுராணம், தமிழ் இலக்கண மாபுராணம், சேக்கிழார் இயற்றிய பெரிய புராணம்

---

1. கன்னடத்தில் மிகப் பழையநூல் எனக் கருதப்படும் 'கவிராஜ மார்க்கம்' கி. பி. 9-ம் நூற்றாண்டினதாதலின், அதற்குப் பிற்பட்டதே கர்நாடகச் சந்தமாகிய 'குணகாங்கியம்' என்பதை யுணர்க.

2. தெலுங்கில் மிகப் பழையநூல் கி. பி. 11-ம் நூற்றாண்டினதான 'நன்னையபாரதம்' என்பது. சாஸனங்களுள் பழமையானது கி. பி. 6-ம் நூற்றாண்டினதாதலாலும், 'வடுகச்சந்தம்' கி. பி. 6-ம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதே என்பதை ஐயமற வுணரலாம்.

இம்மூன்று பெயர்களையும் கூர்ந்துநோக்குக. முன்னவை சமணர் உச்ச நிலையுற்றிருந்தபோது செய்யப்பட்டவை. பின்னது சைவம் ஓங்கப்பெற்ற காலத்தது. சுருங்கக்கூறின், வடநூல்வழித் தமிழாசிரியர் செய்த நூல்களே சங்கயாப்பு, மாபுராணம், பாட்டியல் மரபு முதலாகிய இலக்கண நூல்கள் என்பது இதுகாறுங் கூறியவற்றால் அறியலாம். இவை யாவற்றையும் உரையிற் குறித்திருத்தலின், இவற்றுக்குப் பிற்பட்டனவே யா. காரிகை, விருத்தி என்பதும், அமிதசாகரரைக் குறித்திருப்பதால், இவற்றுக்குப் பிற்பட்டதே வீரசோழியம் என்பதும் நன்கறியக்கிடத்தல் காண்க.

வடமொழி யாப்பிலக்கணப் பகுதிகள் கி. பி. 3-ம் நூற்றாண்டுக்குப் பின்னரே தமிழ்நூல்களில் இடம்பெற்றன என்பதை ஒருவாறு மேல் விளக்கினோம். இதனைப் பேராசிரியர் கூற்றும் வலியுறுத்துதல் காண்க: யா. விருத்தியுரையுள், 'காலத்திற்கேற்றன கோடல்' என்ற முறைப்படி, 'குரு—லகு' என்பனவும் பிறவும் (பக். 464 முதலாகவரும் பக்கங்கள்) காணலாம். இவற்றைப்பற்றிப் பேராசிரியர் தொல். செ. சூ. 51-ன் உரையில், "வடநூலாசிரியர் அறுவகைப் பிரத்தியங்களால் எழுத்துக்களைக் குருவும் லகுவும் என இருகூறு செய்து, உறழ்ந்து பெருக்கிக் காட்டுவதோர் ஆறு (வழி) உண்டு. அவரும் இருபத்தாறு எழுத்தளவும் உறழ்ந்து காட்டி, ஒழிந்தனவொழிந்து போவார்", எனக் கூறியிருத்தலை நோக்க, 'குரு, லகு, பிபீலிகாமத்திமம்' முதலியவை வடநூலாசிரியர் இலக்கணங்கொண்டு சேர்க்கப்பட்டவை என்பது வெளிப்படை, இவை தொல்காப்பியம் முதலிய தொன்னூல்களில் இல்லை என்பது, இவை கூறுமிடத்து யா. வி. உரையாசிரியர் தொல்லாசிரியர் சூத்திரங்களை ஆதாரமாகக் காட்டாமையானும் உணரலாம்.

### யா. வி. உரையிற் காணப்பெற்று இப்போழுதில்லாப் பண்டை நூல்கள்*:

1. முத்தொள்ளாயிரம் (2700 செய்யுட்களில் 105 கிடைத்துள்ளன.)

2. புராண சாகரம். 3. கலியாண கதை. 4. குடமூக்கிற்பகவர் செய்த வாசுதேவனார் சிந்தம். 5. பெருஞ்சித்திரனார் செய்யுள் (சங்க நூல்களிள் உள்ளவை அல்ல). 6. ஔவையார் செய்யுள் (சங்க நூல்களிள் உள்ளவை அல்ல). 7. பத்தினிச்செய்யுள். 8. அடிநூல். 9. அணி இயல். 10. அமிர்தபதி.

11. அரச சந்தம். 12. அவிநந்தமாலை. 13. ஆசிரிய முறி. 14. காலகேசி. 15. இரணியம். 16. சயந்தம். 17. தும்பிப்பாட்டு. 18. தேசிகமாலை. 19. நாலடி நானூறு. 20. பசந்தம். 21. பாவைப் பாட்டு. 22. பிங்கல கேசி. 23. புணர்ப்பாவை. 24. பெரிய பம்மம். 25. பொய்கையார் நூல். 26. போக்கியம். 27. மணியாரம். 28. மந்திர நூல். 29. மார்க்கண்டேயனார் காஞ்சி. 30. வதுவிச்சை. 31. வளையாபதி முதலியன. இவற்றுள் இரண்டொன்று தவிர ஏனைய கடைச் சங்கத்துக்குப் பிற்பட்ட காலத்தேதான் செய்திருத்தல் கூடும் என்பது அவற்றின் பெயர்களைக் கொண்டே எளிதில் கூறிவிடலாம். இது நிற்க.

## கம்பராமாயணத்துக்கு முற்பட்ட தமிழ் இராமாயணம்?

யா. வி. உரையாசிரியர் "இன்னும் பல தொடையால் வந்த பஃறொடை வெண்பா இராமாயணமும் புராண சாகரமும் முதலாகவுடைய செய்யுட்களில் கண்டுகோள்க" எனக் (சூ. 62-ன் உரை) கூறியுள்ளதை நோக்க, வெண்பாவில் இராமாயணம் ஒன்று இருந்திருத்தல் கூடுமெனத் தெரிகிறது. கம்பராமாயணம் விருத்தப்பாவால் ஆகியதென்பதை "விருத்த மெனும் ஒண்பாவில் உயர் கம்பன்" என்ற தொடரே உறுதிப்படுத்துதல் காண்க. இப்போது அரைகுறையாக உள்ள 'பாரத வெண்பா'வைப் பாடிய பெருந்தேவனார் மூன்றாம் நந்திவர்மன் காலத்தவர் என்பது, அவர் பாரத வெண்பாவில் 'தெள்ளாறு' என்னுமிடத்தில் பல்லவன்கொண்ட வெற்றியைக் குறிப்பிடுவதால் உணரலாம்.* இங்ஙனம் கி. பி. 9-ம் நூற்றாண்டில் பாரதம் வெண்பாவிற் செய்யப்பட்டதைப் போன்றே இராமாயணமும் வெண்பாவிற் செய்யப்பட்டிருத்தலும் கூடுமோ, இரண்டும் இதிகாசநூல்கள் ஆதலின்? இன்றேல், 'பஃறொடை வெண்பாவிற் குதாரணம் இராமாயணச் செய்யுட்களிற் காண்க' என உரையாசிரியர் கூறிப் போந்ததேன்? வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட சமணர் காலத்தே சிந்தாமணி, சூளாமணி, பாரதம் போலவே இராமாயணமும் மொழிபெயர்க்கப் பட்டிருத்தல் கூடாதோ? இந்நிலையில், களப்பிரர் காலத்திலோ பல்லவர் காலத்திலோ பாரத வெண்பாவைப் போலவே 'இராமாயண வெண்பா' ஒன்று செய்யப்பட்டிருத்தல் கூடியதே என்ற முடிபேகொள்ள வேண்டுவதாயுளது. இது, மேலும் ஆராய்ச்சிக்குரியது.

---

* Vide P. 232 'Pallavas of Kanchi' by R. Gopalan.

தோல். செய்யுளியல் உரையிற் காணப்பெறும் இப்போழுதில்லாப் பண்டை நூல்கள் :

1. யாழ்நூல். 2. தகடூர் யாத்திரை. 3. பாரதம். 4. பருப்பதம். 5. சிறுகுரீஇயுரை. 6. தந்திர வாக்கியம். 7. வஞ்சிப் பாட்டு. 8. மோதிரப் பாட்டு. 9. கடகண்டு. 10. கந்தர்வ நூல். 11. விளக்கத்தார் கூத்து. 12. மூவடி முப்பது முதலியன.

இவர் உரையால், அக்காலத்திய கூத்து வகையினையும் கூத்த நூல்களையும் நன்குணரலாம்: 'சேரி மொழி' என்பது பாடி மாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணுமைப் பொருட் டொடரானே கொடுத்துச்செய்வது புலன். அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டுகொள்க' (சூ. 241 உரை).

யா. காரிகை உரையால் அறியப்படுவன:

1. உரையாசிரியர் குணசாகரர் மேற்கோளாகக் காக்கை பாடினியார் யாப்பிலக்கணத்தினின்றும் சுமார் 27 சூத்திரங்களையும், மயேச்சுரர் யாப்பினின்றும் சுமார் 10 சூத்திரங்களையும், அவிநயர் யாப்பினின்றும் 10 சூத்திரங்களையும், பல்காயனார் யாப்பினின்றும் 5 சூத்திரங்களையும் சிறுகாக்கை பாடினியார் யாப்பினின்றும் இரண்டொன்றும், நற்றத்தனார் யாப்பினின்றும் நான்கும், கையனார் யாப்பிலிருந்து இரண்டும், சங்க யாப்பினின்று ஒன்றும், கலிதயனார் யாப்பினின்று ஒன்றும், பெயர் தெரியாத புலவர் ஒருவர் யாப்பினின்றும் சுமார் 41 சூத்திரங்களையும் காட்டியுள்ளமை, மேற்கூறப்பெற்ற நூல்கள் அவர் காலத்தில் சிதறுண்டிருந்த நிலைமையைச் செவ்விதாகக் காட்டுவதாகும்.

2. யா. வி. உரையிற் கூறப்பெறாத யாப்புநூற்புலவர் மூவர் இவ்வுரையில் இடம் பெற்றுள்ளார். அவருள் 'கலிதயனார்' என்பவர் ஒருவர்; 'பாடலனார்' என்பவர் ஒருவர் (இவர் 'மாடலனார்' என்பவர் போலும்; பெயர் நாளடைவில் ஏடெழுதுவோர் கவனக்குறைவால் இக்கதியடைந்திருத்தல் கூடும்.); பெயர் தெரியாப் புலவர் மூன்றாமவர்.

3. இவ்வுரையிற் காணப்பெறும் புதிய நூல் 'திருவள்ளுவப்பயன்' ஒன்றே. இஃது இப்போது இருப்பதாகத் தெரியவில்லை.

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்வான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

## குறிஞ்சி

இயற்கைப் புணர்ச்சியின் இறுதியில் தலைவன் பிரிதலுற்றது கண்ட தலைவி பின்னும் தலைவனைக் கூடப்பெறுவதாமோ என்று ஐயுற்றுக் கவன்ற நிலைக்கண், தலைவன் அவளை வற்புறுத்தித் தேற்றிக் கூறியது.

செம்புலப் பெய்நீரார் பாடியது

40. யாயும் ஞாயும் யாரா கியரோ ?
எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர் ?
யானுநீயு மெவ்வழி யறிதும் ?
செம்புலப் பெய்நீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.

என்பது இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த பின்னர்ப் பிரிவரெனக் கருதி யஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடு கண்டு தலைமகன் கூறியது.

பதவுரை:—

யாயும்—என்னுடைய தாயும், ஞாயும்—உன்னுடைய தாயும், யாராகியரோ—என்ன உறவினையுடையார்? எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்—என்னுடைய தந்தையும் உன்னுடைய தந்தையும் என்ன முறைமையையுடைய சுற்றத்தவர்? யானும் நீயும்—நானும் நீயும், எவ்வழி அறிதும்—இதற்கு முன் எவ்விடத்து ஒருவரை ஒருவர் கண்டறிந்துள்ளோம்? (இவை யாவும் இல்லை) (இங்ஙனமாக), செம்புலம் பெய்நீர்போல—செந்நிறமுள்ள இடத்தில் பெய்த நீர் அந்நிறமே யடைதல்போல, அன்புடை நெஞ்சம்—அன்பினையுடைய நமது நெஞ்சம், தாம் கலந்தனவே—பிறர் உதவியின்றித் தாமே கலந்து ஒன்றுபட்டன. (ஆதலின் இது தெய்வ வசத்தால் இயைந்ததோர் கூட்டமாகலின் இதற்கு இடையூறு நேராதென்பது குறிப்பு.)

எனவே தெய்வவசத்தான் இயைந்ததா மிக்கூட்டம் என்றும் பிரிதலுறுதெனத் தலைவன் தலைவியின் அச்சமகற்றினுனுதலின் பிரிவச்ச மகற்றலாம் என்க.

செந்நிலத்தில் பெய்தநீர் இயல்பாகச் செந்நிறமே யுறுதல் போலத் தாமே அன்புகாரணமாக நமது மனம் ஒன்றுபட்டன எனக் கூறிய உவமை நயம் வியக்கத்தக்கது. இவ்வுவமை காரணமாக இச்செய்யு ளியற்றினூர்க்குச் செம்புலப் பெய்ந்நீரார் என இத் தொகை தொகுத்தார் குறித்தது பாராட்டத்தக்கது. யாய்—தாய். எந்தை—என்தந்தை. நுந்தை—உன்தந்தை—மரூஉ மொழி. கேளிர்- கேள் + இர்—சுற்றம்.

## மேற்கோள் விளக்கம்:—

(1) "யாயும் யாயும்...........கலந்தனவே" — "இது பிரிவ ரெனக்கருதிய தலைவி குறிப்புணர்ந்து தலைவன் கூறியது"

(—தொல்—களவு. பக், 372)

(2) "தெய்வத்தின் ஆதலின் ஏதம் பயவா தென்றுன். "யாயும் யாயும்......கலந்தனவே" இது நம்மானன்றி நெஞ்சந்தம்மில் தாம் கலத்தலின் தெய்வத்தாலுயிற்றெனத் தெருட்டியது"

(—தொல்—கற்பி. பக். 614)

(3) ஞாய்—நின்தாய். யாய் என்பது தன்மைப் பெயரடி யாகவும், ஞாய் என்பது முன்னிலைப் பெயராடியாகவும் பிறந்த முறைப்பெயர்கள். இதனை 'ஞாயர் பயிற்ற' 'ஞாயர் பாலூண்டி' 'ஞாயர் மாட்டைப்பால்' 'ஞாயையு மஞ்சுதி' எனக் கலித்தொகை 81-12; 85-28; 36; 7-25, என்னும் செய்யுட்களின் அடிகளாலும் அவற்றின் குறிப்பாலும் அறிக

(4) யாய்—என் தாய்—என்பதற்கு "எந்தையும், யாயுமறிய வுரைத்தியின் யானுற்ற நோயுங்களை குவைமன்" என்பது மேற் கோள். —(கலி. முல்லை, 11, 2-4.)

(5) இச்செய்யுள் தலைவன் பிரியேன் என்றற்கு மேற்கோள்.

(—நச்சி. அகம்—சங்கம்)

(6) "இன்ன வுவகை பிறிதியாதி யாயென்னை"

—(கலி. முல்லை. 5·62)

(1) 'யாயும் ஞாயும்'—'யாயும் யாயும்' —(பிரதிபேதம்)

(2) 'செம்புலப் பெய்ந்நீர்போல—செம்புலப் பெயனீர்போல'

—(பிரதிபேதம்)

மெய்ப்பாடு—உவகை.

பயன்—அச்சமகற்றல்.

"அல்லல்தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின் கண்ணும்" என்றது "தலைவி தன் துன்பந்தீர ஆர்வத்தோடு பொருந்தச் சொல்லப்பட்ட பொருண்மைக்கண்ணும் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு, என்றது களவுக்காலத்து வருந்திய வருத்தந் தீரத் தனது காதன் மிகுதிதோன்றச் சொல்லுதற் பொருளின் கண்ணும் என்றவாறு, (உ-ம்) "யாயும்......கலந்தனவே" எனவரும்.

—(தொல்-கற்பி-144 சூ. இளம்பூ. பக். 225)

பாலை

தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்தானாகத் தலைவி அவன் பிரிவாற்றாது வேறுபாடுற்று வருந்துதலைக்கண்டு தோழி கவன்றாளாக, அதனையுணர்ந்த தலைவி, தலைவனுடனிருந்தால் மகிழ்வதும், பிரிந்தால் வருந்துவதும் தனதியல்பெனத் தோழிக்குக் கூறியது.

அணிலாடுமுன்றிலார் பாடியது

41 காதல ருழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற
அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்
மக்கள் போகிய வணிலாடு முன்றிற்
புலம்பில் போலப் புல்லென்
றலப்பேன் றோழியவ ரகன்ற ஞான்றே.

என்பது பிரிவிடை வேறுபாடுகண்டு கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

பதவுரை :—

காதலர்—நம்மிடத்து அன்புள்ள தலைவர், உழையர் ஆக—அருகிலுள்ளவராகுங்கால், பெரிது உவந்து—மிகவும் மகிழ்ந்து, சாறுகொள் ஊரின்—திருவிழாவினைக்கொண்டுள்ள ஊரைப்போல, புகல்வேன்—மகிழ்ச்சியுற்றிருப்பேன்; மன்ற—இது நிச்சயம்; தோழி—தோழியே, அவர் அகன்றஞான்று—அவர் நம்மை விட்டுப் பிரிந்துசென்ற காலத்தில், அத்தம் நண்ணிய—காட்டு வழியையடைந்த, அம்குடி சிறு ஊர்—அழகிய குடியையுடைய சிறிய ஊரிலுள்ள, மக்கள் போகிய அணில் ஆடு முன்றில்—மக்கள் அகன்றதும், அணில்கள் விளையாடுவதான முன்னிடத்தையுடையதுமான; புலம்பு இல்போல—தனிமையான பாழ்வீட்டைப்போல, புல் என்று அலப்பேன்—அழகுகெட்டு நான் வருந்துவேன். (இதுவே என் இயல்பு.)

உழை—பக்கம். புகல்வேன்—மகிழ்ச்சியுறுவேன். சாறு—திரு விழா. ஊரில்—ஊரைப்போல. அத்தம்—சுரம்; காட்டுநெறி. புலம்பு—தனிமை. புலம்பு + இல் = புலம்பில்; புலப்பில். இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்க தொகை. மென்றொடர் மொழியாதலின் வேற்றுமையில் வன்றொடராகிப் புலப்பில் எனப் புணர்ந்து நிற்கும்.

ஊரில் மக்கள் நீங்கிவிட்டால், தனிப்பட்ட பாழ்வீட்டில் அணில் விளையாடும். மக்களில்லாமையால் வீடு பொலிவற்றிருக்கும். அணில் அச்சமின்றித் திரியும்.

தலைவன் பிரிந்தவழி வருந்தும் தலைவிக்கு மக்கள்போகிய அணிலாடு முன்றிலையுடைய தனிமைப்பட்ட வீட்டை உவமை கூறிய திறன் நோக்கத்தக்கது. அணிலாடு முன்றில் முற்றத்திலும் முன் இறப்பிலும் அணில் விளையாடும் என இயற்கையை விளக்கிய தன்மை நோக்கத்தக்கது.

அணிலாடு முன்றில் என இவ்வழகிய தொடரை அமைத்த காரணத்தாலேயே இச்செய்யுளாசிரியரை 'அணிலாடு முன்றிலார்' எனக் குறிப்பிட்டனர் தொகுப்பாசிரியர்.

மேற்கோள் விளக்கம்:—

1. "பிரிவிடையாற்றாள் எனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவ லெனக் கூறியது" என்பதற்கு, "காதலருழையராகப்.............. ஞான்றே" என்பது மேற்கோள். —(தொல் கற்பு. பக். 73)

2. 'சாறுகொள் ஊர்'

(அ) "அறாஅ யாணர் அகன்றலைப் பேரூர்ச்சாறுகழி வழிநாட் சோறு நசையுறாது" (பொருந. 1—3)

(ஆ) "விழவுமேம்பட்ட வென்னலனே தண்ணந் துறைவனொடு கண்மாறின்றே" (—குறுந். 125)

(இ) "முழவொலி முந்நீர் முழுதுட னாண்டார் விழவூரிற் கூத்தேபோல் வீந்தவிதல் கண்டும்" —(பழமொழி 343)

(ஈ) "கல்லெனக் கவின்பெற்ற விழாவாற்றுப் படுத்தபிற், புல் லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ"

(கலி. பாலை. 4—10, 11)

3. "அங்குடிச்சீறூர் மக்கள்போகிய அணிலாடு முன்றில் புலம்பில்போல அலப்பேன்"

1. "தலைவரைப் பிரிந்தமகளிர் மக்கள்போகிய பாழூரை ஒப்பர்"—நச்சினார்க்கினியம்.

2. நால்வேறு தேவரு நலத்தகு சிறப்பிற்
பால்வேறு தேவரு மிப்பதிப் படர்ந்து

மன்னன் கரிகால் வளவனீங் கியநா
ளிங்ஙகர் போல்வதோ ரியல்பின தாகிப்
பொன்னகர் வறிதாப் போதுவர்'' —(மணி.1. 37—41)

3. "நல்குநர் பிரிந்து நலனுணப் பட்டோர்
அல்குநர் போகிய வூரோரன்னர்''
—(கலி.பாலை. 22: 10-11.)

சாறு—விழா—"சாறுதலைக்கொண்டென" —(புறம் 82)

அத்தம்—சுரம்—"அத்தம் நண்ணிய அங்குடிச்சீறூர்"
—(அகநானூறு—களிற். 9, 10)

புல்லெனல்—அழகுகெடல்—"புனிற்று நாய் குரைக்கும் புல்லெனட்டில்" —(சிறுபாணற்—132)

மெய்ப்பாடு—அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பயன்—ஆற்றுமாறு அறிவித்தல்.

---

## திருவாசகத்தில் விடுபட்ட ஒரு வாசகம்

[ஒக்கூர் திரு வீர. ராம. நா. சாத்தப்பசெட்டியார்]

**ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர் வாய்ப் பிறந்த வாசகத் தேனே**

என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணி மாலையில் பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள மூழ்கிய புனிதனாகிய நம் மணிவாசகப்பெருமானையும், தம் அருட்டிறத்தால் கருங்கன் மனமுங் கரைந்துருகும் படியாக அவர் இனிய தமிழில் மிகவுந் தெளிவாய் மொழிந்த திருவாசகத்தையும் பற்பல விடத்தில் சிறப்பித்துக் கூறி இருக்கின்றார். இன்னும் எத்தனையோ அறிவிற்சிறந்த பெரியோர் தங்களாலும் புலவர்நன்மக்களாலும் அநேகவிதமாய் அநேகம் பாக்களாற் சிறப்பாய் எடுத்துரைத்துப் புகழ் மிக்குடையதாய் இருப்பது திருவாசகம்.

அத்தகைமை வாய்ந்த மறுவிலா மாணிக்கமென்னும் திருவாசகத்தைப்பற்றி எனதுயிர்த் தோழராகிய ஒருவருடன் நான் உரையாடிக் கொண்டிருக்கும்போது அவர் திருவாசகத்தின் கடைசிப்பதிகமாகிய அச்சோப் பதிகம் ௧௦-வது வாசகம் (பாட்டு) ஒன்று பழைய காலத்து ஏட்டுப் பிரதியிலிருந்து

தமது பார்வைக்குவந்ததென்றும் அவ்வாசகமானது, அப்பதிகம் ஒன்று முதல் ஒன்பது எண் வரையுள்ள வாசகத்தைப் போலவே இசையும் பொருளும் ஒத்து வாதவூரடிகளுடைய வாக்காக மதிக்கத் தகுந்ததாயிருக்கிறதென்றும் அதை அடிகள் வாக்காகத்தான் இருக்குமென்று நிச்சயமாய்த் தாம் எண்ணி இருப்பதாயும் சொன்னார்கள். அன்னார் சொன்ன வாசகத்தையும் கீழ் தருகின்றனம் :

செத்திடமு பிறந்திடமு மினிச்சாவா திருந்திடமும்
அத்தனையு மறியாதார் அறியுமறி வெவ்வறிவோ
ஒத்தநில மொத்தபொருள் ஒருபொருளாம் பெரும்பயனை
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

நான் பார்த்தவரையில் திருவாசக அச்சுப்புத்தகங்களில் இவ் வாசகம் இருப்பதாய்த் தென்படவில்லை. நானும் இதில் ஐயங் கொண்டு பத்திரிகை வாயிலாக வெளியிட்டு எனது சந்தேகத்தை நீக்கிக்கொள்ளலாமென் றெண்ணி இச்செந்தமிழ்ச் செல்வி மூலம் எழுதி வெளியிடலானேன்.

மேலே காட்டிய திருவாசகத்தில் நான் கொண்டிருக்கும் சந்தேகத்தை நீக்கிக்கொள்ள இச்செந்தமிழ்ச் செல்வியெனும் பத்திரிகை வாயிலாக விடை எழுதி தெளிவுபடுத்துமாறு சைவ சமயமே சமயமென்பதை நன்குணர்ந்து தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டு செய்யும் நூல் ஆராய்ச்சி வல்லுநராகிய பல்லாவரம் ஸ்ரீ மறைமலையடிகளையும், செந்தமிழ்ச் செல்விஇதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்களையும், மற்றும் நூல் ஆராய்ச்சியாளர்களையும் வித்வான்களையும் மிகவும் நயந்து கேட்டுக் கொள்ளுகின்றேன்.

---

# இரண்டாங்குறள்

[ஐயா. பா. வே. பொன்னுசாமி நாய்க்கர் அவர்கள்]

**கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ**
**னற்ற டொழாஅ ரெனின்.**

கற்றதனால் ஆயபயன் என் = உலகிற்றோன்றிய பன்னூல்களையும் கற்றதனால் உண்டாய பயன் யாது? ஒன்றுமில்லை வால் அறிவன் நல்தாள் தொழார் எனின் = சுத்தமான மெய் யுணர்வினை யுடையானது நல்லதாளைத் தொழார் ஆயின்.

விளக்கம்:—கற்றதனால் என்றமையால் உலகிற்றோன்றிய பன்னூல்களையும் கற்று அவற்றுள் பயனற்றவைகளை நீக்கி, பயனுடையவைகளை என்னாளும் கசடறக்கற்று, கற்றவண்ணம் நிற்றல்வேண்டும்; அப்படி நிற்கவேண்டியவைகளில் முதன்மை பெற்றது வாலறிவன் நற்றாள்தொழல். வாலறிவன் என்பதற்குச் சிறப்புவகையில் சுத்தமான மெய்யுணர்வினன் என்று பொருள். கல்வி கல்+வி கல்=கிண்ட (வருவது) வி= கண்—கல்=தோண்ட (வருவது) வி=அறிவு. (1) எண்ணும் எழுத்தும் கற்று முகத்திரண்டு புண்ணைக் கண்ணாக்கிக் கொளினும் தொழார் எனின் பயனில்லை. புறக்கண்ணிருந்தும் அந்தகராகும் பொருட்செல்வர்களைப்போல, இவர்களும் அகக்கண்ணிருந்தும் அகக்குருடர்கள் ஆகிறார்கள். (2) உடற்குறுதிதரும் உலகநூல் பலவற்றையும் உயிர்க்குறுதிதரும் அறிவுநூல் பலவற்றையும் நுண்ணிதாய்க் கற்றதனால் ஊறி அகன்ற அறிவால் தொழார் எனின் பயனில்லை. போதிய பொருள் இருந்தும் அறவழியிற் செலவிடாத அறிவற்ற பொருட்செல்வர்களைப்போல இவர்களும் கல்வி அறிவிருந்தும் அறிவற்றவர்கள் ஆகிறார்கள். இதுபற்றியே "கற்றும் அறிவில்லாதவர்களைவிடக் கல்லாதவர்களே நல்லவர்கள் நல்லவர்கள்" என்றார் தாயுமானவரும். (3) அறிவுநூல்களைக்கற்றுக் கடவுளைத் தொழுது மெய்யுணர்ந்து வீடுபேறடைதல் வேண்டும். 'பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னுஞ்—செம்பொருள் காண்பதறிவு"—ஆதலின் தொழார் எனின் அறிவு நூல்களைக்கற்றும் மெய்யறிவற்றவர்கள் ஆகிறார்கள். வீடுபேறும் கிட்டுவதில்லை. "மடங்கொன்றறிவகற்றும் கல்வி" "அறிவறிவதறிவே" என்றார் பிறரும். தயரதன் "மன்னுயிர்க்குறுவதே செய்துவைகினேன். என்னுயிர்க்குறுவதும் செய்ய எண்ணினேன்"—என்கிறான். (4) கடவுள் இல்லை என்கிற கொள்கையார், கடவுள் உண்டென்று உறுதியாய் முடிவு கட்டிக்கூறும் அறிவுநூல்களைக் கற்றும் தம் கொள்கையை விட்டுத் திரும்பித் தொழார் எனின் இகபரத்திற்குச் சாதனமான இருவகை நூல்களையும் கற்றும் பயனில்லை; விழற்கிறைத்த நீராகும். (5) நாத்திகர் நாவரி கருவியாகவும் இக்குறள் விளங்காநிற்கும்.

கருத்துரை—"அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே"—பொருளீட்டி அறத்தின்வழி செலவிட்டுப் புகழ்பெற்று இகத்தில் இன்புறுவதற்கும், மெய்யுணர்ந்து வீடடைதற்கும், கடவுளைத் தொழல்வேண்டும்.

குறிப்பு—தாள் என்றமையால் கையும் பெற்றாம்—திருமுருகாற்றுப்படை "உறுநர்த்தாங்கிய மதனுடைநோன்றாட்,

செறுநர்த்தேய்த்த செல்லுறழ் தடக்கை", அறியாமை (முதன்)மையைப்போக்கி மெய்யுணரச்செய்யும் தாள் பிறவிப் பிணிக்கு மருந்தாதலின் 'நற்றாள்' என்றார். ஆரியவேதம் இத் தகைய நற்றாளிற்பிறந்த வேளாண் மாந்தரைச் சூத்திர ரென்று இழித்துக்கூறல் எற்றிற்கு? எவன், என்பது என் என்று தொகுத்தல் விகாரம்பெற்று இன்மை விளக்கிநிற் கிறது. கொல்—அசை. அளபெடை செய்யுள் நோக்கிவந்தது.

---

## கம்பநாடரும், உடன்பிறப்புநோக்கத்தின் உண்மையும்

[வித்துவான் எஸ். ஆறுமுக முதலியார் M. A., L. T.]

(உரிமை ஆசிரியர்க்கே)

இப்பரந்த நிலவுலகத்தின் எப்பகுதியை நோக்கினும் இன்று மக்களிடையே அன்பும், ஒப்புரவும் நிலவாமல், அழுக்காறும், அவா வெகுளி இன்னாச்சொற்களும், பூசல்களும், பிற கெட்ட குணங்களும் குடிகொண்டு, ஒற்றுமை நீங்கி, பல வகை வேற்றுமைகளே வேரூன்றி நிலைத்திருப்பதை நாம் காண லாகும். இப்பூசல்கள் பலதிறப் படுகின்றன. முதலாளி தொழிலாளிகளின் பூசல்கள் ஒருபுறம். சாதிப் போர்கள் மற் றொருபுறம். சமயப் பூசல்கள் வேறொருபுறம். அரசியல் குழப் பங்கள் நான்காவதோர் புறம். இவைகளாலும் பிறகாரணங்க ளாலும் மக்களிடை ஒற்றுமை, மனஅமைதி, இன்பம், வாழ்க் கையில் விருப்பு, செல்வம் முதலியன வரவரக் குன்றி வேற் றுமை, மனக்கவலை, இடைவிடாத துன்பங்கள், வறுமை, பிணி, வாழ்க்கையில் வெறுப்பு முதலியன வளர்ந்துகொண்டு வந்து பல்வேறு நாட்டுமக்களும் மேல்நிலை யெய்துவதன்றிக் கீழ்நிலை யெய்துகின்றனர்.

மக்கள் இந்நிலை யெய்துவதற்குப் பல காரணங்கள் இருப் பினும், இவற்றிற்கெல்லாம் அடிப்படையான காரணம் அன்பு என்னும் அரியகுணம் மக்களிடை நிலவாமையும், தன்னல மொன்றையே பெரிதாகக் கருதி அதற்கெனவே வாழுதலும், பிறர்நலத்தையும் பேணுவதில் நம்பிக்கையும் ஆர்வமுமில்லா மல், பிறருக்குத் தொண்டாற்றல் என்னும் அருஞ்செயலை மேற்கொள்ளாமையும், பிறரையும் தன்னைப்போலவும், தன் உடன்பிறந்தோரைப் போலவும் கருதி அன்பு செய்யாமையும் பிறவுமாம் என்று சுருங்கக்கூறலாம்.

இவ்வன்பின் மாட்சியும், உடன்பிறப்பு நோக்கத்தினால் விளையும் ஆக்கங்களும் நம்மனோரா லளவிடற்பாலவோ? அன்

பென்ப தொன்றன்றன்மை அமரரும் அறியாதது அல்லவோ? அன்பென்னும் இவ்வரிய தெய்வ இயலானது மக்களிடை நிலவுமாயின் மேற்கூறிய பூசல்கள் எல்லாம் தலைகாட்டாது ஓடுமென்பதில் ஐயமென்ன இருக்கின்றது? இவ்வன்புடைமையும், உடன்பிறப்பு நோக்கமும் ஒன்றற்கொன்று இன்றியமையாததாய் ஒன்றையொன்று விட்டுப்பிரியாது அவாவி நின்று பயனைச் செய்கின்றன. தொடர்புடையார்களிடத்துக் காதலுடைமையாகிய இவ்வன்பு முதல்முதல் இல்லத்திலே பிறந்து ஆண்டுள்ளோர்பால் இயங்கிப் பின் கொஞ்சம் கொஞ்சமாய் விரிந்துசென்று, சுற்றத்தாரையும், விருந்தினரையும், ஊராரையும், நாட்டாரையும், தேசத்தாரையும், பிற தேசத்தாரையும், உலகிலுள்ள எல்லா மக்களையும், மக்களையேயன்றிப் பிற வுயிர்களாகிய விலங்குகள், செடிகொடிகள், ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன முதலியவற்றையும், இவற்றையெல்லாம்படைத்த இறைவனையுஞ்சென்று பற்றிவிடுகின்றது. தொடர்புடையவர்களிடத்துத் தோன்றிய இது வளர்ச்சியை அடையஅடைய, தொடர்புநீங்கி, தொடர்பில்லாத பிறரிடத்தும் பிறவுயிர்களிடத்தும் இயல்பாகவே காரணமில்லாமலே சென்றுவிடும். இவ்வாறு அன்பு பிற்காலத்து மாறுவதை அருள் என்றும் கூறலாம். இவ்வருள் அல்லது அன்பின் முதிர்ச்சி, கால, தேச, நிற, மொழி, சமய, வேற்றுமைகளை எல்லாம் கடந்து வெற்றிபெற்றுவிடும். அருளுடைச் செல்வர்களை ஒரு நாட்டினர், மொழியினர், காலத்தினர், சமயத்தினர் மட்டுமன்றி எல்லா நாட்டினரும், மொழியினரும், காலத்தினரும் சமயத்தினருமே போற்றிப் பின்பற்றுவர். இதற்குத் திருவள்ளுவர் வாழ்க்கையும் அவர் தம் திருக்குறளும் மலைபோன்ற சான்றுகளாகும். "அருள் என்னும் அன்பீன் குழவி" என்று சுருங்கச் சொல்லி அவ்வா றுவதைப் படிபடியாகத் தமது இல்லற துறவற இயல்களில் விளங்கவைத்தவரன்றோ நம் நாயனார்!

இவ்வன்புடைமை மக்களது பிறப்புரிமையாகும். அஃதில்லார் மக்களாய்ப் பிறப்பினும் மக்களல்ல—நடைப்பிணங்களே. அவர்கள் உடம்பு எலும்பும்தோலும் சேர்த்துப் பண்ணப்பட்ட ஒரு கூடேயன்றி வேறல்ல. "அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலா ரென்புதோல் போர்த்த வுடம்பு" பென்பர் ஆசிரியர் வள்ளுவனார். மேலும் இம்மையிலும் மறுமையிலும் இன்புற்றிருப்பது எல்லாம் அன்புற்றமர்ந்தவழக்கினாலன்றோ?

இவ்வன்புடைமை, இவ்வுலகத்துள்ளாரனைவரையும் உடன்பிறப்பு நோக்கொடு பார்ப்பதற்கு இன்றியமையாததென்று வற்புறுத்தவேண்டிய அவசியமில்லை. உடன்பிறந்

தோர் ஒருவரையொருவர் உள்ளன்போடு நேசித்து இன்பத்தி லும் துன்பத்திலும் ஒற்றுமையுடையோராய், ஒருவருக்கொரு வர் உற்றுழியுதவி, முன்னோர்கள் தேடிவைத்த பொருளைப் பங்கிட்டுக் கொள்வதா லுண்டாகும் வேற்றுமைகளுக்கும், குடும்பத்தில் ஏற்படும் இன்னும் பல வேற்றுமைகளுக்கும் அடிமைகளாகிப் பூசல்விளைத்து இல்வாழ்க்கையின் இன்பத் தையும் தெய்வத்தன்மையையும், மாட்சியையும் குலைத்து விடாமல் அவற்றைப் போற்றி வாழ்தற்குரியர். இதே ஒற்று மையையும், அன்பையும் ஒருவர், தன்னுடன் பிறக்காது, தன் தந்தைக்கு வேறு மனைவியர்பால் பிறந்தோரிடத்தும் செலுத் துதற்குரியர். முற்கூறியாங்கு இவ்வுடன்பிறப்பு நோக்க மாகிய அன்பு பிறகு படிப்படியாய், பரந்த நோக்கமும் விரிந்த பார்வையும் பெற்று, வீட்டின் எல்லையைக் கடந்துசென்று, சுற்றத்தாரையும், ஊராரையும், நாட்டாரையும், பிற தேயத் தவரையும், உலகமக்கள் முழுவதையும், பிறவுயிர்களையும் பற் றிச் சென்று உடன்பிறப்புத் தன்மை என்பதைஉலகம் முழுவ தும் பரப்பி அரசு வீற்றிருக்கும். இங்கிலையில் இன்பமும், மகிழ்ச் சியும், வசியும் வளமும், செல்வமும், அறமும் ஓங்கி, துன்பம், பசி, பிணி, வறுமை, மறம் முதலியவை கொல்லப்படும். அன் பும் உடன்பிறப்பு நோக்கும் குடிகொண்டுள்ள நாட்டில் பல மக்கட்டொகுதிகளும், சாதிப்பிரிவுகளும் இருப்பினும், அவற் றிடையே ஒத்த உணர்ச்சி நிலவி அவ்வேற்றுமைகளை ஒழிக் கும். பொருட்செல்வமட்டுமன்றி அதோடு கல்விச்செல்வமும் குணமேன்மையும் ஒருங்கே சேர்வதால் சமுதாயத்தின் பல வித சாதிப் பிரிவுகளின்றிப் பல்வேறு சமயங்களிலும், குடி வாழ்க்கையிலும் ஒருவித அமைதியும் உடன்பிறப்புணர்ச்சி சியுங் குடிகொண்டிருக்கும். மக்கள் ஏற்றத் தாழ்வுணர்ச்சி யின்றி எல்லோரையும் ஒருங்கே நேசித்து, எங்கெங்கு ஒழுக் கமும், விழுப்பத்தைத் தரவல்ல கொள்கைகளும் காணப்படு கின்றனவோ, அவற்றையெல்லாம் போற்றிப் பெருமைப் படுத்துவர். இங்கிலையில் பிறப்பினாலேதான் உயர்வுண்டு என்ற கொள்கைக் கிடமிராது. இவ்வுடன்பிறப்பு நோக்கின் அன் புத் தளை பலரையும் சேர்த்துப் பிணித்துவிடுவது ஒரு வியப் பன்று. ஒரு பொதுமொழி பல பிரிவினராயுள்ள மக்களை யும் ஒருங்கு சேர்ப்பதைப் போலவே, உடன்பிறப்பு நோக்க மும் பல்வேறு நாட்டினரையும் சமயத்தினரையும், சாதியின ரையும் ஒன்றுசேர்த்துவிடும். மகமதியன், கிறிஸ்தவன், சைவன், வைணவன், சமணன், பௌத்தன், பிராமணன், பிராமணனல்லாதான், ஆண், பெண், முதியோர், இளைஞர், உயர்ந்தோர், தாழ்த்தப்பட்டோர் என்ற பலரும் உடன்பிறப்பு

நோக்கத்தால், அன்பால் ஒன்றுபடுத்தப்படலாம். பல சமயங்களிலும் உயர்ந்த நிலையையடைந்த ஆசிரியர்கள் பலரும் சிறந்த சமரச ஞானச் செல்வர்களாய்த் திகழ்ந்து உலகுக்குத் தொண்டுபுரிந்ததை நாம் நமது நாட்டின் பண்டை வரலாற்றிலிருந்து படிக்கின்றோம். சமரச ஞானிகளாகிய தாயுமான சுவாமியும், இராமலிங்க அடிகளும் அளவிட முடியாத, ஒப்பற்ற தொண்டை இம்முறையில் ஆற்றிச் சென்றுள்ளனர். கவியரசர் இரவீந்திரரும், அன்பின் பிறப்பிடமும் இருப்பிடமுமாகும் காந்தியடிகளும் இவ்வொப்பற்ற அன்புநெறியில் நின்று, அதை உலகில் பரப்புகின்றவர்கள் அல்லரோ? இத்தகைய ஒரு தெய்விக நிலையை இவ்வுலகில் நிலைநாட்ட முயற்சிப்பதே ஒவ்வொரு நாட்டாரும் மேற்கொள்ளவேண்டிய சிறந்த குறிக்கோள் என்பதை மறுப்பாரும் உண்டோ?

இவ்வுடன்பிறப்பு நோக்கத்தின் பெருமையும் அவசியமும், அதனை வாழ்க்கையில் கையாண்டு பயன்பெறுதலும் தமிழ்நாட்டிற்கும் தமிழர்களுக்கும் புதியதல்ல. பிறநாடுகளெல்லாம் அநாகரீகத்திலும் அறியாமையிருளிலும் மூழ்கிக் கிடந்த காலத்திலேயே நம் நாட்டினர் கல்வியிலும், கைத்தொழில்களிலும், வாணிகத்திலும், உழவுத்தொழிலும் அரசியலிலும் சமயநெறியிலும் பிறவற்றிலும் தலைசிறந்து விளங்கியதோடு, குண நலத்திலும், ஒழுக்க மேம்பாட்டிலும் மேன்மையுற்று விளங்கினர். நமது பண்டைப் பனுவல்களை மேலெழுந்தவாரியாய் ஒருமுறை படிப்போரும் இதை உணரலாம். மக்கள் இவ்வன்புநெறியில் நின்று ஒழுகினர். புலவர் பெருமக்களும் தத்தம் நூல்களில் இந்நோக்கத்தின் மாட்சியையும் பயனையும் பல வழிகளில் எடுத்துக்காட்டியும், தம் வாழ்க்கையில் நடத்திக்காட்டியும் வந்தனர்.

மிகப்பழங் காலமாகிய தொல்காப்பியர் காலத்திலேயே சாதிப்பிரிவுகளின் குறிப்புக்களை நம் தமிழ்நாட்டில் காணினும் அக்காலந்தொட்டும் அதற்குப்பிறகு கடைச்சங்க நாட்களிலும் மிகவும் அதிகமாக இவ்வுடன்பிறப்புநோக்கம் தமிழ் மக்களின் இல்வாழ்க்கையிலும், சமுதாய வாழ்விலும், சமய வாழ்விலும் கையாளப்பட்டுவந்தது. சாதிக்கொள்கைகளைக் கண்டிக்கவல்ல பல சிறந்த புலவர்கள் அக்காலத்துத் தோன்றினர். தம்மைப்போன்று பிறரை நேசித்தல், அன்பு, விருந்தோம்பல், அருள் முதலிய விழுமிய கொள்கைகள் நின்று நிலவி மக்களிடையே ஒற்றுமையைப் பரப்பி வந்தன. பிறரிடத்தில் நம்பிக்கையும் பிறர் கருத்துக்களையும் எண்ணங்களையும் போற்றி அவற்றிற்கும் நன்மதிப்புக் கொடுத்தல், பிறர்மனம் புண்ணாகும்படி நடக்கக்கூடாதென நினைத்தல் முதலியனவும் மேற்கொள்ளப்பட்டதனால் ஆராய்ச்சி மேலோங்கிற்று. (தொடரும்)

# ஆனைந்து

[திரு. துடிசைக்கிழார் அ. சிதம்பரனார் அவர்கள்]

(முன் ௩௯௬-ஆம் பக்கத்தொடர்ச்சி)

கோரோசனையானது வாசனைத்திரவியங்களோடு சேர்ந்து குங்குமக் குழம்புசெய்ய உதவியாகும். அதனைச் சிவபெருமானுக்கு முழுக்குக்குப்பின் சாத்திய பின் பூக்களை அணிவார்கள். கோரோசனை பஞ்சகௌவியத்தில் சேராது. இது "கோதில் கோரோசனைதி குங்குமக் குழம்புங்கூட்டி" என்ற வாக்கால் அறியலாம்.

ஆகையால் இந்நூல் செய்தகாலத்திலேயே ஆரியர் கலப்பால் தமிழ்நான்மறைகளை ஆராயாது பஞ்சகௌவியம் இன்னதென அறியத் தடுமாற்றம் உண்டாயிற்று என்று தெரியக்கிடக்கிறது.

## 4. தமிழ் வேதங்களின்படி—ஆனைந்து

ஆன் ஐந்து சிவபெருமானுக்கு மிகவும் உகந்தது. தமிழ் வேதங்களிலும், தமிழ் ஆகமங்களிலும் ஆனைந்தைப்பற்றியும் அவைகளைச் சிவபெருமானுக்கு ஆட்டும் முறையைப்பற்றியும் ஆட்டினோர் பெறும் பயன்களைப்பற்றியும் பல இடங்களில் கூறப்பட்டிருக்கிறது.

ஆகமப் பிரகாரம் திருக்கோயில்களில் இலிங்கத்திற்கும் ஏனைய திருவுருவங்கட்கும் ஆட்டும் ஆனைந்து வேறு, ஸ்மிருதிகளிலும் பத்ததிகளிலும் கூறிய ஆனைந்து வேறு.

தமிழ் நான்மறைகளின் ஆதாரங்களைக் காட்டிப் பின் விவகரிப்பாம்:—

1. ஆடினாய் நறு நெய்யொடு பால் தயிர்

(சம்—கோயில்—1)

2. நூலால் நன்றா நினைமின்கள் நோய்கெடப்
பாலாம் ஐந்துடனாடும் பரமனார்
காலால் ஊன்றுகந் தான்கடம் பந்துறை
மேலால் நாஞ்செய்த வல்வினை வீடுமே.

(அப்—குறு—9)

3. ஆக்கள் ஏறுவர் ஆனஞ்சாடுவர்

(அப்—குறு—3)

4. ஆனிடை ஐந்துகந் தாடினனை

(சம்—கலிக்காமூர்—5)

5. ஆமலி பாலும் நெய்யும் ஆட்டி
(அப்—நேரிசை—6)

6. பாலோடு நெய் தயிர் பலவுமாடுவர்
(சம்—வெண்காடு—3)

7. பாலே ஆடுவர் பன்மறை ஓதுவர்
(அப்—வெண்காடு—10)

8. வஞ்சங்கொண்டார் மனம் சேரகில்லார்
நறு நெய் தயிர் பால்
அஞ்சுங் கொண்டாடிய வேட்கையினர்
(சுந்—நின்றியூர்—5)

9. ஆவினில் ஐந்துகந்தானை
(அப்—கஞ்சனூர்—1)

10. பாலோடு நெய் தயிர் தேன் ஆடிகண்டாய்
(அப்—கொட்டையூர்—3)

11. ஆவினில் ஐந்து மமர்ந்தாய் நீயே
(அப்—ஐயாறு—8)

12. ஆனிடை ஐந்து மாடுவர்
(அப்—குறுநெய்த்தானம்—3)

13. பாலோடு நெய்யாடிய பால் வண்ணனே
(சம்—ஆனைக்கா—3)

14. பால் நெய் பயின்றாடு பராய்த்துறை
(சம்—பராய்த்துறை—4)

15. பாலு நெய்யும் தயிரும் பயின்றாடி
(சம்—சோற்றுத்துறை—2)

16. பானெய்யாடுவர் பாலைத்துறையாரே
(அப்—குறு—1)

17. செய்ய மேனியன் தேனொடு பால் தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்
மையலால் மறவா மனத்தார்க் கெலாம்
கையி லாமலகக்கனி யொக்குமே.
(அப்—குறு—நீலக்குடி—2)

18. தேனெய் பால் தயிர் ஆட்டுகந்தானே
(சுந்—ஆவடுதுறை—9)

(அச்சுப்பிரதிப்பாடம்)

19. பாலு நற்றயிர் நெய்யொடு பலபல வாட்டி

(ஏட்டுப்பிரதிப்பாடம்)

பாலு நற்றயிர் நெய் வெணெய் மோர் பல வாட்டி
(அப்—கடவூர்—வீரட்டம்—9)

20. பாலினொ டுதயிர் நறுநெய் யாடினன் காண்
(அப்—வீழிமிழலை—2)

21. நெய்யினொடு பாலிள நீர் ஆடினன் காண்
(அப்—வீழிமிழலை—5)

22. ஆவிலைந் தமர்ந்தவன் (சம்—சிவபுரம்—7)

23. பாலினல் நறு நெய்யால் பழத்தினல் பயின்றாட்டி
(சம்—செங்காட்டங்குடி—5)

24. ஆனஞ்சு மாடியை
(அப்—கீழ்த்தேவூர்—1)

(அச்சுப்பிரதிப்பாடம்)

25. பாலொடு நெய் தயிரும் பயின்றாடும் பரமேட்டி

(ஏட்டுப்பிரதிப்பாடம்)

பாலோடு நெய் தயிர் மோர் பயின்றாடும் பரமேட்டி
(சம்—ஆரூர்—2)

அச்சுப்பிரதி

26. பாலொடு நெய் தயிரும் பயின்றாடிய பண்டரங்கன்

(ஏட்டுப்பிரதி)

பாலோடு நெய் தயிர் மோர் பயின்றாடிய பண்டரங்
(சம்—வெண்டுறை—2) [கன்

27. மடப்பால் தயிரொடு நெய் மகிழ்ந்தாடு மறையோதி
(சுந்—நாட்டியத்தான் குடி—6)

28. நல் வெணெய் விழுது பெய்தாடுதிர் நாடொறும்
(சம்—திருநெல் வெணெய்—1)

29. பாலும் நறு நெய்யும் தயிரும் பயின்றாடி
(சம்—வடுகூர்—2)

30. பாலு ணெய் முதலாமிக்க பசுவிலைந் தாடுவோனே
(அப்—அண்ணாமலை—9)

31. பற்றி வாளர வாட்டும் பரிசரே
பாலு நெய்யுகந் தாடும் பரிசரே (சம்—கச்சி—4)

32. நெய்யும் பாலும் தயிருங்கொண்டு (சுந்—ஓணகாந்தன்றளி—1)

33. ஆவிலஞ்சுகந்தாடுமேவன் கழல் (அப்—குறு—1)

34. ஆவாகி ஆவினிலைந்துமாகி (அப்—தாண்டகம்—8)

மேலே காட்டிய மறைமொழிகளைக் கூர்ந்து நோக்கு மிடத்து, பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் இவ்வைந் துமே ஆனைந்து என்றும், ஆனைந்தில் சிவபெருமானுக்கு மிகுந்த வேட்கை என்றும், அப்பொருள்களை ஆட்டினார் பெறும் பயன் இன்னதென்றும் தெளிவாக அறியக்கிடக்கின்றது.

இன்னமும் கோசலம், கோமயத்தைப் பற்றி ஒரு வரி யாவது காணோம் என்றும் அறியக்கிடக்கின்றது.

ஒரு சமயம் இறந்துபட்ட தேவாரங்களில் இருக்குமோ என நினைப்பதற்கும் இடமில்லை. ஏனென்றால் வெண்ணெயை யும், மோரையும் கூறிவிட்டபடியால் கோசலம், கோமயம் ஆனைந்தில் சேர்க்கப்படவில்லை எனக் கண்டிப்பாய்க் கூறலாம்.

தமிழ் மறைகளில் பாலைத்தான் பெரும்பாலும் முதலில் கூறப்பட்டிருக்கிறது. சிறுபான்மை நெய்யை முதலில் கூறப் பட்டிருக்கிறது. ஆகையால் இரு முறைகளே கூறப்பட்டிருக் கிறதே யொழிய பத்ததிகள் கூறும் வண்ணம் மூன்று விதங் கள் கூறப்படவில்லை.

ஆனைந்துடன் துணைப் பொருள்களாக இளநீர், பழம், தேன், இவைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஆகையால் சிவ பெருமானுடைய முழுக்குக்கு ஆனைந்தே சிறந்ததென்றும் மற்றப் பொருள்கள் எல்லாம் இரண்டாம் பட்சம் என்றும் அறிகிறோம்.

## 5-ம் இயல்

### மருத்துவ நூலின்படி-ஆனைந்தின் குணம்

#### பால்

பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணுளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர்—எனு மிவர்
எல்லார்க்கும் ஆகும் இளைத்தவர்க்கும் சாதகமாம்
நல்லாய் பசுவின் பால் நாட்டு.

#### தயிர்

பசுவின் தயிரால் பசிமிக வுண்டாம்
இசிவுறும் அசிரணநோ யேகும்—பசையகன்ற

தாக மிளைப்பு இருமல்தாங் கொணு மெய்யெரியும்
ஏகு மூலகில் இயம்பு.

மோர்

வீக்க மகோதரம் உள்வீறு குன்மம் பாண்டு பித்தம்
தாக்கு மருந்திட்டு அதிசாரமொடு—கூக்குரலே
மாறாத் திரிதோடம் மந்தம்அனற் றூகம்போம்
வீறுவின் மோருக்கு மெய்.

வெண்ணெய்

கண்ணிலெழு நோயும் கண்ணெரிவும் பீளையும் போம்
எண்ணும் பசியும் எழும்புங்காண்—கண்ணரிய
ஆவின்றும் வெண்ணெய்க்கு அகலும் வண்மேகமெலாம்
பூவினரர்க் கெல்லாம் புகல்.

நெய்

தாகமுழலை சுட்கம் சர்த்தி பித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரியும் விக்கலழல்—மாகாசம்
குன்மம் வறட்சி குடற் புரண்டல் அஸ்தி சுட்கம்
சொன்மூலம் போக்குமிதைத் துப்பு.

மருத்துவ நூலின்படி மேலே காட்டிய ஆனைந்துக்கும் பல வியாதிகளைப் போக்கக்கூடிய வல்லமையுண்டு என்பதை அறியலாம்.

அதனாலேதான், இவ்வைந்து பொருள்களையும் அடிக்கடி உபயோகப் படுத்தும்படி ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்கின்றன.

இவ்வைந்து பொருள்களையும் ஒவ்வொருவரும் தனித் தனியாக நாள்தோறும் தமிழ்நாட்டில் உபயோகிக்கிறார்கள். ஆனால் தனித்தனியாக அருந்துவதிலும் ஐந்தையும் கூட்டி அருந்துவதோ முழுகுவதோதான் சிறந்தது; ஏனென்றால்,

"வஞ்சங் கொண்டார் மனம் சேரகிலார்
அஞ்சுங் கொண்டாடிய வேட்கையினர்"

என்ற சுந்தரர் வாக்கினால் சிவபெருமானுக்கு அஞ்சும்சேர்ந்ததுதான் பிரியம் என்று தெரிகிறது. தனித்தனி ஆடுவதில் சிவபெருமானுக்குப் பிரியம் அதிகம் இல்லை, அஞ்சும் சேர்த்தே முழுகுவதில் பிரியம். அதனாலேதான் "ஆனைந்து" என்று பேராயிற்று. தனித்தனியாக அப்பொருள்கள் இருந்தால் "ஆனைந்து" என்று சொல்லமுடியாது. ஆகையால் கோயில்களில் இவ்வைந்து பொருள்களையும் சேர்த்தே முழுக்காட்ட வேண்டும். அப்படி அந்த ஐந்து பொருள்களும் ஒன்றோ

டொன்று சேர்வதால் ஒருவித சேர்க்கைச் சக்தி (chemical action) உண்டாகிறது. அந்த சத்தியானது சகல வியாதிகளேயும் போக்கி தேகத்தைத் திடப்படுத்தி ஆயுளை நீட்டிக்கச் செய்கிறது. இந்த சத்தியோடு செய்பவனுடைய மனோசத்தியும் கூடுகிறது.

ஆயுளை நீட்டிக்கச் செய்வதில் மோர் மிகவும் சிறந்தது. உரோமனியா தேசத்தார் மோரையே அதிகமாக உபயோகப்படுத்துவதால் அதிக நாள் வாழ்ந்திருக்கிறார்கள் என்பது சரித்திரம்.

வெண்ணெயினால் கண்வியாதிகளும் மேகவியாதிகளும் நீங்குகிறது.

சிறந்த பொருள்களாகிய இவ்விரண்டையும் விட்டுவிட்டு கோசலத்தையும் கோமயத்தையும் சேர்ப்பது,

"காய்ச்ச பலாவின் கனி அருந்த மாட்டாமல்
ஈச்சம் பழத்திற் கெய்த்தலைந்த வாறொக்கும்."

ஆவினது சாணத்தாலும் கோசலத்தாலும் சில வியாதிகள் நீங்குகின்றனவே என்றால் மனித மூத்திரம், கழுதை விட்டை, நாய்விட்டை, எருமைச் சாணி, முதலியவைகளும் கூட சில வியாதிகளேக் கண்டிக்கிறது. ஆகையால் அவைகளேயும் கூட்டிக்கொள்ளலாமே!

கோசலமும் கோமயமும் ஆவினுடைய கழிவாயில்களின் வழியாய் வந்த இழிபொருள்கள். அவைகள் உயர்ந்த பொருள்கள் ஆகா.

அமிர்தமயமான பாலினிடத்து இருந்து உண்டாகும் பொருள்களுக்கு அவை சமானமாகா. ஆகையால் அது கடாவன்றென மறுக்க.

சாணம்

ஆவினது சாணம் அடிபடு வீக்கம் உதிரம்
தாவிவரு கிருமி சார்ந்த கபம்—மேவுசுரம்
தங்கும் தாகம் போக்கும் சாற்றின் மெய்ச்சுத்தி அப்பால்
தெங்கின்பாலுக் குஒக்கும் செப்பு.

கோமூத்ரம்

விடபாண்டு சோபை வீக்கம் சகல
விடமுதிர மாலைஎன மெத்தப்—புடவிதனில்
பேசலக்க ணேடுதேந்தப் பீடையு மகன்றிடுமே
கோசலத்தால் ஆரணங்கே கூறு.

### மனித மூத்ரம்

காணுக் கடிபோம் கதித்தெழுந்த வீக்கமது
காணுத காயசித்தி கைக்குணம்—பூணே
பதித்தசெங்கை மாதே பகர்மாந்த ருக்குள்
உதித்தசிறு நீருக்கென் றோது.

ஆப்பியும் ஆமூத்திரமும் போக்கக்கூடிய வியாதிகளை பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் முதலிய பதார்த்தங்களே போக்கக்கூடியதாயிருக்க இவ்விழிந்த பொருள்களைக் கொள்வானேன்?

கோசலம், கோமயம் சேருவதால் பால், தயிர், நெய்யின் குணங்களும் மாறுபடுமே அல்லாமல் குணத்தைச்செய்யாது. இயற்கையாகவே கழிக்கப்பட்ட பொருளை கழிக்கப்படாத அமிழ்தமயமான பொருளோடு சேர்த்தால் எல்லாம் கெட்டுவிடும் என்பது சொல்லாமலே அமையும்.

## 6-ம் இயல்

### ஆனைந்தின் பதப்பொருள்

"ஆன் ஐந்து" என்பது தென்தமிழ். இரண்டு பதங்களால் அமைந்த ஒரு தொடர்மொழி.

"பஞ்சகௌவியம்" என்பது வடதமிழ். பசுவினிடத்திலிருந்து உண்டாகும் ஐந்து பொருள்கள் என்று அவர்கள் பொருள் கொள்ளுகிறுர்கள்.

இந்தப்பொருளைக் கவனித்தால் "ஆன்ஐந்து" என்பது முதல் பதம் என்றும் "பஞ்ச கௌவியம்" என்பது மொழி பெயர்ப்பு மொழி என்றும் கருத இடம் இருக்கிறது. தமிழ் நன்குய் அறியாத ஆரியன் ஒருவன் "ஆனைந்து" என்பதை "பஞ்சகௌவியம்" என மொழிபெயர்த்துவிட்டான்:

ஏனென்முல் கூறுதும்;

"ஆனைந்து" என்பதற்கு "ஆவினிடத்திலிருந்து உண்டாகும் ஐந்து பொருள்கள்" என்பதுதான் வெளிப்படையான பொருள். அதுதான் அவ்வாரியனுக்கும் பட்டது. அதனுல் அவன் அப்படியே மொழிபெயர்த்துவிட்டான். ஆனுல்,

"பாலாம் ஐந்துடனுடும் பரமனுர்" "ஆனிடை ஐந்து"
"ஆனைந்து" "ஆனைஞ்சு"
"ஆவினில் ஐந்து" "ஆவிலைந்து"

"ஆவாகி ஆவினிலைந்துமாகி"

என்ற பெரியார் வாக்கியங்களை எண்ணிப்பார்க்குமிடத்து "ஆனைந்து" என்னும் பதத்திலுள்ள "ஆன்" என்பதை ஆகுபெயராகக் கொள்ளவேண்டியிருக்கிறது. அப்படிக் கொண்டால்,

ஆன் = பால் என்றும் பொருளாகும் இடர்ப்பாடுகள் எல்லாம் ஒழியும். இந்தப் பொருள் அவ்வாரியனுக்குப் படவில்லை. ஆகையால் "ஆனைந்து" என்பதற்கு ஆவினிடத்திலிருந்து உண்டாகும் ஐந்து பொருள்கள் என்று பொருள் கொள்ளாமல் "பாலாம் ஐந்து" என்று பொருள் கொள்ளவேண்டும்.

"பாலாம் ஐந்து" என்றால் "பால் + ஆம் + ஐந்து" "பாலே ஐந்தாகஆகின்ற" என்று பொருள். பாலினுடைய திரிபேதான் மற்றைய நான்கு பொருள்களும் ஆகையால் அவைகளுடன் பாலையும் சேர்த்தால் ஐந்து பொருள்களாகின்றன.

"பால் + ஆன் ஐந்துடனும்" என்றும் பாடம். இது ஏட்டுப்பிரதியில் உள்ளது. "பாலாம் ஐந்து" என்பதே இது அச்சுப் பிரதி.

இதனாற்றான் திருஞான சம்பந்தரும் "பாலாம் ஐந்துடனும் பரமன்" என்றார்.

அப்பரும் "பாலுள் நெய் முதலா மிக்க பசுவில் ஐந்து ஆடுவானே" என்றார்.

ஆனைந்து என்பதற்கு ஆவினிடத்திலிருந்து உண்டாகும் ஐந்து பொருள்கள் என்று பொருள்கொள்ள இடம் இல்லை என்பது கீழ்க்காணும் காரணங்களால் வெளியாம் :—

I. ஆவினிடத்தில் ஐந்து பொருள்கள் உண்டாகவேண்டும். அப்படி இல்லை. மூன்று பொருள்களே உண்டாகக் காண்கிறோம். அவையாவன :—பால், கோசலம், கோமயம்.

ஒருகால் கோரோசனையைச் சேர்த்தாலும் நான்கே பொருள்கள் ஆகின்றன. அப்பொழுதும் ஐந்து பொருள்களைக் காணோம்.

II. தயிர், நெய் இரண்டும் கூட்ட ஐந்து பொருள்கள் என்றால், தயிர் நெய் இரண்டும் பாலின் திரிபு. தனித்து உண்டான பொருள்கள் அல்ல. இவ்விரண்டு திரிபுகளையும் எடுத்துக் கொண்டால் மற்ற இரண்டு திரிபுகளாய மோர் வெண்ணெயை ஏன் விட்டுவிடவேண்டும்? (தொடரும்)




## தாமஸ் ஆல்வா எடிசன் (Thomas Alva Edison)

[திரு. N. குழந்தைவேலன் அவர்கள் B. A.,]

தாமஸ் ஆல்வா எடிசன் என்னும் மின்சாரப் பேரறிஞர் 1847-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 11-ஆம் நாள் அமெரிக்காவில் மிலான் (Milan) நகரில் பிறந்தார். இவர் மின்சார ஆற்றலின் உதவியால் பலதிறப்பட்ட வியத்தகு செயல்களை நிகழ்த்திக்காட்டினார் ஆகலின் இவரை "மந்திரவாதி" (Wizard) என்று அழைப்பதுண்டு. இவர் பல்வேறு புதிய கருவிகளைக் கண்டுபிடித்தார். இவற்றுள் "கிராமபோன்" என்னும் இசைக்கருவியும், "சினிமா" என்னும் அசைவுப் படமும் தலைசிறந்து விளங்குகின்றன.

எடிசனது அறிவு நுட்பம் இவரது இளமைப்பருவத்தின் விளையாட்டிலேயே நன்கு விளங்கிற்று. ஒரு நாள் இவர் தமது வீட்டிலுள்ள வாத்து அடைகாத்துக் குஞ்சுபொரித்தலைக் கண்டு வியந்து தாமும் ஏன் அதைப்போன்று செய்யக் கூடாதெனஎண்ணலாயினர். அங்ஙனமே எடிசன் சில முட்டைகளை அடுக்கிவைத்து அவற்றின்மேல் படுத்து அடை காக்கத்தொடங்கினர். இவர்தம் அன்னையார் தம் மகனைப் பலவிடங்களிலும் தேடியலைந்து முடிவில் அவர் வாத்துக் கூண்டில் படுத்திருப்பதைக்கண்டு அக்கூட்டைக் கலைத்து எடிசனை அழைத்துச் சென்றனர்.

இவர்தந் தந்தையார் சாமுவேல் (Samuel) எடிசன் என்பார் விவசாயப்பொருள்கள் முதலியன விற்று அதனல் கிடைக்கும் ஊதியத்தைக்கொண்டு மிகவும் எளிய வாழ்க்கை நடத்திவந்தார். எடிசனது அன்னையாரான நான்ஸி எலியட் (Nancy Elliot) என்பவர் எடிசனுக்கு வீட்டிலேயே கல்விகற்பித்து வந்தார். எடிசன் ஒவ்வொரு புத்தகமும் படித்து முடித்தவுடன் தந்தையார் மகனுக்குத் தக்க பரிசு கொடுத்துக் கல்வியில் ஊக்கமுண்டாகும்படி செய்துவந்தார். இவருக்கு ஏழு ஆண்டுகள் நிறைவதன்முன் இவர்தம் தந்தையார் மிக்க வறுமையுற்றுக் குடும்பத்துடன் மிலானிலிருந்து உரான் (Huron) என்னுமிடத்திற்குச் சென்றார். இவரது பெற்றோர்கள் செல்வமின்றி வருந்தினர். ஆகலின் இவர் இளமையிலேயே பொருள்தேட நேர்ந்தது. இவர் முதன்

முதலில் புகைவண்டித் தொடரில் புதினத்தாள்கள் விற்கும் தொழிலில் அமர்ந்தார். இவர் பழைய அச்சுப்பொறி ஒன்றை விலைக்குவாங்கி புகைவண்டியின் ஒரு மூலையில் வைத்து "பெருவழித் தூதுவன்" (Grand Trunk Herald) என்னும் புதினத்தாளைப் பதிப்பித்து நடத்தி வந்தார்.

இவருக்கு மின்சார ஆராய்ச்சியில் மிகுந்த ஆர்வம் இருந்தது. ஆதலால் இவர் தமது ஓய்வுநேரங்களை அவ்வாராய்ச்சியிலேயே கழித்துவந்தார். இவர் தொகுத்து வைத்திருந்த பொருள்முழுவதையும் ஆராய்ச்சிக்கு வேண்டியவற்றை வாங்குவதிலேயே செலவழித்தார். இவர் பகற் காலங்களில் புதினத்தாள் விற்கும்பொழுது புகைவண்டி நிலையங்களிலுள்ள தந்தி அறைகளுக்குச் சென்று ஆங்குள்ளவர்களிடம் தந்தி அனுப்பும் முறைகளைப்பற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்வார். மவுண்ட் கிளெமென்ஸ் (Mount Clemens) என்னும் நிலையத்தில் வண்டி அரைமணி நேரம் நிற்பது வழக்கம். இந்த ஓய்வு நேரத்தை எடிசன் தந்திக் கருவிகளை ஆராய்வதிலேயே கழிப்பார். ஒருநாள் அந்நிலையத் தலைவரான மெக்கென்ஸி (Mackenzie) என்பவரது குழந்தை புகைவண்டிப் பாதைக்குள் இறங்கித் தண்டவாளங்களைத் தாண்டிச்செல்ல முயன்றது. அவ்வேளையில் திடீரென்று ஒரு சுமைவண்டி அப்பாதை வழியாக வந்தது. இதை எடிசன் கண்டதும் தமது உயிரையும் பெரிதென்று எண்ணாமல் கையிலிருந்த புதினத்தாள்களைக் கீழே எறிந்துவிட்டுக் குழந்தை இருக்குமிடத்திற்கு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். பாய்ந்த இவர் குழந்தையைத் தூக்கிக்கொண்டு பாதைக்கு வெளியில் குதித்தார். அதற்குள் சுமைவண்டி மிகவும் அருகில் வந்து எடிசனுடைய மிதியடிகளைப் பிய்த்துக்கொண்டு போய் விட்டது. ஆயினும் குழந்தையின் உயிர் காப்பாற்றப் பட்டது. இதற்குக் கைமாறாக அக்குழந்தையின் தந்தையார் எடிசனுக்குத் தந்திமுறைகளை நன்கு கற்றுக்கொடுத்தார்.

இவர் அல்லும் பகலும் ஓயாது மின்சார ஆராய்ச்சி செய்துவந்தார். ஒருநாள் பாரடே (Faraday) என்னும் மின்சார வல்லுநர் இயற்றிய பழைய நூல்கள் இவருக்குக் குறைந்த விலையில் கிடைத்தன. எடிசன் அவற்றை மிகுந்த ஆவலுடன் வாங்கிச்சென்று அன்று இரவு சிறிதும் உறங்காமல் படித்துக்கொண்டிருந்தார். இவர் தந்திக்கருவியைக் குறைந்த செலவில் மிகச்சிறந்த முறையில் அமைக்க வேண்டுமென முயற்சிசெய்துவந்தார். ஒருநாள் வழக்கம்போல் இவர் புகைவண்டியின் ஒரு மூலையில் ஆய்வுகள் நடத்திக் கொண்டிருக்கையில் வண்டியின் அதிர்ச்சியால் கண்ணாடிப்

பாத்திரத்திலிருந்த தீப்பாஷாணம் (Phosphorus) கீழே கொட்டிப்போய் வண்டியில் தீப்பிடித்துக்கொண்டது. எடிசன் சிறிதும் தாமதமின்றி அத்தீயை அணைத்துவிட்டார். ஆயினும் புகைவண்டிக் காவலன் (Guard) சீற்றங்கொண்டு எடிசனைச் செவியில் அறைந்து வெளியில் துரத்திவிட்டான். இதனால் எடிசனது செவிகளில் ஒன்று செவிடுபட்டது. அந்தோ! என்ன கொடுமை! எடிசன் மனமுடைந்து வீடு திரும்பினார். இவர்தம் அன்னையார் மகனைத்தேற்றி வீட்டிலேயே ஆய்வுகள் நடத்திக்கொள்ள இடங்கொடுத்தார்.

சின்னாட்கழித்து இவரது நண்பரான மெக்கன்ஸியின் உதவியால் புகைவண்டிப் பாதையில் இரவில் தந்தியடிக்கும் வேலை இவருக்குக் கிடைத்தது. இவர் பல்வேறு இடங்களில் தந்திவேலைபார்த்து வந்தார். இவர் இத்தொழிலில் இணையற்றவராக விளங்கினதால் இவரது சம்பளம் 25 டாலரிலிருந்து நூற்றைம்பது டாலர்வரை உயர்ந்தது. ஆயினும் தந்திவேலைக்காரர் பலர் பொறுமையினால் இவருக்குக் கேடு சூழ்வாராயினர். எடிசன் சிறிதும் ஊக்கம் குன்றாது தமது முயற்சியிலேயே கண்ணாயிருந்தார். இவர் பாஸ்டன் (Boston) நகரத் தந்திச் சாலையில் இருக்கும்பொழுது ஒட்டுகள் பதிவுசெய்யும் மின்சாரக்கருவி ஒன்று செய்தார். இதனால் எடிசனது புகழ் பாஸ்டன் நகரெங்கும் பரவிற்று இதற்குப் பின் எடிசன் ஒரே தந்திப்பாதையில் ஒருசெய்தி போய்க்கொண்டிருக்கும்போது அதற்கு எதிராக மற்றொரு செய்தியை அனுப்பும் வழி கண்டுபிடித்தார். இதுவுமன்றி ஒற்றைக்கம்பியில் சேர்ந்தாற்போல எதிரெதிராக நான்கு செய்திகளை அனுப்பும் முறையும் இவரால் கண்டுபிடிக்கப்பட்டது. இதனால் தந்திச் செலவு சுருங்கினதுமன்றி மிகுந்த செய்திகள் காலத்தாழ்வுமின்றி அனுப்பவும் ஏதுவாயிற்று.

எடிசன் இம்முறைப்படி நியூயார்க் (New York) நகருக்குச் செய்தியை அனுப்பினார். அங்குள்ளவர்கள் இம்முறையை உணரமுடியாது போகவே இவர் நியூயார்க்கிற்குத் தாமே செல்லநேர்ந்தது. எடிசன் ஆங்கு வேலையகப்படாது ஏங்கி வருந்தினின்றனர். அக்காலத்தில் ஒரு பொன்கடையிலுள்ள மின்சாரப்பொறிகள் ஓடாது நின்றுபோயின. எடிசன் அவற்றை நுட்பமாக ஆராய்ந்து அவை முன்போல் இயங்கும்படி செய்தார். அந்நிலையத்தலைவர் அகமகிழ்ந்து எடிசனைத் தமது மின்சாரப்பொறிகளின் மேற்பார்வையாளராக அமைத்துக்கொண்டார். இவ்வேலையில் எடிசனுக்கு மாதம் 300 டாலர் சம்பளம் கிடைத்தது. சின்னாட்கழித்து

இவர் அந்நகரத் தந்திச் சாலையில் வேலைக்கு அமர்ந்தார். அங்கு இவரது அரிய ஆராய்ச்சிகளின் பயனாய் விலைகளை அச்சடிக்கும் கருவிகள் இவரால் கண்டுபிடிக்கப்பட்டன. இக்கருவிகளின் அருமையை உணர்ந்த முதலாளிகள் அவற்றைத் தமக்கே உரிமையாக்கிக்கொள்ள எண்ணினர். அவர்கள் அவ்வுரிமையைப் பெற எடிசனுக்கு நாற்பது ஆயிரம் டாலர் கொடுத்தனர்.

எடிசன் இத்தொகையிற் பெரும்பகுதியைச் செலவழித்து ஒரு தொழிற்சாலையைக் கட்டினார். இவரது தொழில் நாளடைவில் விரிவுற்றதால் 1873-ஆம் ஆண்டில் நீவார்க் (Newark) என்னுமிடத்தில் மற்றொரு பெரிய தொழிற்சாலையை ஏற்படுத்தினார். ஒரு முறை எடிசன் விற்பனைக்காகச் செய்த புதிய தந்திக்கருவிகள் சரிவர வேலை செய்யவில்லை. இவர் தமது உதவியாளர்களையும் உறங்க விடாது இடைவிடாமல் அறுபதுமணி நேரம் வருந்தியுழைத்து அக்கருவிகளின் குறைகளை நீக்கினரென்றும், இவ் அரிய முயற்சி கைகூடினவுடன் இவர் தொடர்ச்சியாக முப்பத்தாறு மணி நேரம் உறங்கினரென்றும் கூறப்படுகின்றது.

இவரது தொழிற்சாலையில் மேரி ஸ்டில்வெல் (Mary Stillwell) என்பவர் வேலைபார்த்து வந்தார். இவரை எடிசன் காதலித்து 1873-ஆம் ஆண்டில் மணஞ்செய்துகொண்டார். இவருக்கு மேரியன் (Marion), ஆல்வா (Alva), லெஸ்லீ (Leslie) என்னும் மூன்று குழந்தைகள் இருந்தன. இவர் முதல் இரண்டு குழந்தைகளையும் முறையே புள்ளி (Dot) வரி (Dash) என்று தந்திக்குறிகளின் பெயரிட்டு அழைப்பது வழக்கம். இவர் தமது அன்புமிக்க மனைவியை 1881-ஆம் ஆண்டில் இழக்கும்படி நேரிட்டது. எனவே இவர் இரண்டாம் முறை மணஞ்செய்துகொண்டார். இவருக்கு இரண்டாவது மனைவியாரிடம் மேடிலீன் (Madeline) சார்ல்ஸ் (Charles) என்னும் இரு பிள்ளைகள் தோன்றினர்.

நீவார்க்தொழிற்சாலையில் இவரது வேலைகளுக்கு இடம் போதவில்லை. ஆகையால் இவர் மென்லோ பார்க் (Menlo Park) என்னுமிடத்தில் மிகப்பெரிய தொழிற்சாலையொன்று நிறுவினர். இங்கு எடிசன் பல்வேறு புதிய கருவிகளை இயற்றினர். பெல் (Bell) என்னும் ஆசிரியர் கண்டுபிடித்த டெலிபோன் (Telephone) என்னும் பேச்சுத் தந்தியினால் நெடுந்தொலைவிலுள்ள இடங்களுக்குப் பேச்சுகளைச் செலுத்த இயலாதிருந்தது. எடிசன் பலதிறப்பட்ட நுட்பமான ஆய்வுகள் நடத்தி இறுதியில் வன்மைமிக்க பேச்சுச் செலுத்தி

ஒன்று செய்துமுடித்தார். இதன் உதவியால் எவ்வளவு தொலைவானாலும் பேசும் ஓசை சிறிதும் வலிகுன்றாது போய்ச் சேர்ந்தது. இதன்பின் எடிசன் மிக நுண்ணிய வெப்பத்தையும் அளந்து காட்டும் கருவிகளையும், நுகர்தற்கரிய மணங்களின் தன்மைகளையும் அளக்கக்கூடிய கருவிகளையும், மைக்ரபோன் (Microphone) என்னும் ஒலிபெருக்கித் தந்தியையும் கண்டுபிடித்தார்.

எடிசன் நிகழ்த்திய வியத்தகு புதுப்புனைவுகளுக்கு ஓர் அளவில்லை. இவர் 1877-ஆம் ஆண்டில் கிராமபோன் (Gramaphone) என்னும் இசைக்கருவியைக் கண்டுபிடித்தார். இதன் உதவியால் மக்களின் பாடல்களையும் பேச்சுகளையும் பதிவு செய்து மீண்டும் வேண்டும்போது அவை வெளியிடப்படுகின்றன. எடிசன் ஒரு நாள் தந்திக்கருவிகளை ஆராய்ந்து பார்க்கும்பொழுது இயல்பாகப் பாடிக்கொண்டிருந்தார். அப்பாடலின் ஓசை தற்செயலாய் மின்சார ஒலிபரப்பியின் மேல் பட்டதால் அதன்மேல் மூடியிருந்த தாள் அசைவுற்று அதிலிருந்த ஊசி எடிசனது விரலிற் தைத்தது. 'ஒலியினால் ஊசியை அசைக்கக்கூடுமெனில் அவ் அசைவுகளை ஏன் ஒரு தட்டின்மேல் பதிந்துகொள்ளக்கூடாது' என இவர் எண்ணினார். அங்ஙனம் பதிவான கோடுகள் மீண்டும் முன்போல் அவ் ஒலியைக்கொடுக்கக்கூடும் என இவருக்குத்தோன்றிற்று. எடிசன் இந்நுட்பத்தை ஆதரவாகக்கொண்டு வேலைசெய்யத் தொடங்கினார். இவர் முதலில் தகரத்தட்டிலும் பின்னர் மெழுகுத்தட்டிலும் ஓசையைப் பதிவுசெய்தார். இவர் நாளொன்றுக்கு இருபது மணிக்குமேல் உழைத்து ஆறுமாதங்களுக்குப் பின் வெற்றியடைந்தார். 1878-ஆம் ஆண்டில் பிரான்ஸ் (France) தேயத்தில் நடந்த பொருட்காட்சியில் கிராமபோனைக் காண மக்கள் திரள்திரளாக வந்தனர். அங்கு வந்திருந்த பெரியோர் பலர் தங்கள் பேச்சுகளையும் பதிவு செய்துகொண்டனர். எடிசனுக்கு இக்கருவியால் திரண்ட பொருள் கிடைத்தது. எடிசன் இக்கருவியை முதன் முதலாக இயற்றியபொழுது மக்கள் பலர் அதை ஓர் ஏமாற்றமெனக் கருதினர். ஓசைகள் அக்கருவியிலிருந்து உண்மையில் தோன்றவில்லை யென்றும் எவனோ ஒருவன் மறைந்திருந்து குரலைப் பலவாறு மாற்றிப்பேசுகின்றான் என்றும் கூறினர்.

எடிசன் மின்சார இருப்புப்பாதை உண்டாக்கும் நோக்கத்துடன் நெடுநாட்களாக ஆய்வுகள் நடத்திவந்தார். இவர் தமது தொழிற்சாலையிலேயே மின்சார ஆற்றலை உண்டுபண்ணி இருப்புப்பாதையில் பாயும்படி செய்தார். இம்மின்சார

ஆற்றல் தண்டவாளத்தின்மேல் நிற்கும் வண்டி உருளையின் வழியாக உட்புகுந்து வண்டியை ஓட்டும் கருவியை இயங்கும்படி செய்தது. இவர் சில முதலாளிகளின் உதவிகொண்டு மின்சார இருப்புப்பாதைச் சங்கம் ஒன்று ஏற்படுத்தினார். இம்மின்சார வண்டி சிக்காகோ (Chicago) நூவியில் முதலிய நகரங்களின் பொருட்காட்சி சாலைகளில் காட்டப்பட்ட போது யாவராலும் கொண்டாடப்பட்டது.

சர் ஹம்ப்ரி டேவி (Sir Humphry Davy) என்னும் புலவரால் மின்சார விளக்கு கண்டுபிடிக்கப்பட்டது. இவ் விளக்கில் தோன்றும் வெளிச்சம் சிறிது நேரமே நிற்கவல்லதாக இருந்தது. இவ்விளக்கு அவியாமல் நீண்ட நேரம் எரியும்படி நல்லமுறையில் அமைக்கவேண்டுமென எடிசன் முயன்றுவந்தார். இவர் நெடுநாட்களாக ஊணுறக்கமின்றி வருந்தியுழைத்து இறுதியில் ஒரு விளக்கைச் செய்துமுடித்தார். இவரது உதவியாளர்களும் அவ்விளக்கைச் செய்து முடிக்காது உறங்குவதில்லையென் உறுதிசெய்துகொண்டிருந்தனர். ஆயினும் அவர்கள் அனைவரும் சில நாட்களில் தம் மன உறுதியை இழந்து தம்மால் உறக்கம் விழிக்க முடியாதெனக் கூறிவிட்டனர். எடிசன் சிறிதும் ஊக்கம் குன்றாமல் இருபத்தொரு நாட்கள்வரை கண் துஞ்சாது வேலைசெய்து முடிவில் அவ்விளக்கை எரியும்படி செய்தார். இவர் தம் உளத் திட்பத்தை என்னென்று கூறுதும்! எடிசனுடைய மின்சார விளக்குகள் உலகு எங்கும் பரவின. இதனால் எடிசனுக்குப் பொருள் ஏராளமாய் வந்து குவிந்தது. பொறாமையினாலும்பேராசையாலும் சிலர் எடிசன் அடைந்த ஊதியத்தில் தங்களுக்கும் பங்கு வேண்டுமென வழக்குத் தொடர்ந்தனர். ஆயினும் எடிசனே இறுதியில் வெற்றியடைந்தார்.

இதற்குப்பின் எடிசன் டைனமோ (Dynamo) என்னும் மின்சார உற்பத்திப் பொறியைக்கண்டுபிடித்தார். ஒரு நாள் இப்பொறியின் ஆற்றலை மிகுதிப்படுத்தும் நோக்கத்துடன் இவர் மிக விரைவாக இயங்கும்படி செய்தார். அதிலிருந்த நீராவிக் குழாய் இடிபோன்ற ஓசையுடன் வெடித்தது. நல்வினைப்பயனால் ஒருவருக்கும் தீங்கு நேரிடவில்லை. ஆயினும் இவரது உதவியாளர்கள் நடுநடுங்கி ஓட்டமெடுத்தனர். எடிசனது ஆராய்ச்சிகள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே போனதால் மென்லோ பார்க்கில் அமைக்கப்பெற்ற நிலயங்களும் போதாமற்போயின. இதனால் எடிசன் 1886-ஆம் ஆண்டில் ஆரஞ்சி மலையின் அடிவாரத்தில் புதிய நிலையம் ஒன்று ஏற்படுத்தினார்.

எடிசன் அசைவுகளையும் ஓசைகளையும் அங்ஙனமே படம் பிடித்துக் காட்டவேண்டுமென்று 1887-ஆம் ஆண்டிலிருந்து முயற்சிசெய்துவந்தார். சற்றேறக்குறைய முப்பது ஆண்டு களுக்குப்பின் இவரது எண்ணம் நிறைவேறிற்று. இம்முறைப் படி நகர்ந்து செல்லும் மக்களின் பல்வேறு நிலைகளை ஒரு விநாடிக்கு நாற்பத்தாறு வீதம் புகைப் படங்கள் பிடிக்கப் படுகின்றன. இப்படச் சுருணைகளை விரைவாகச் சுழற்றி அவற் றின் நிழல் ஒரு திரையின்மேல் படும்படி செய்தால் மக்களும் ஏனைய பொருள்களும் அசைந்து ஆடுவதுபோல் கண்ணுக்குப் புலனாகின்றது. சினிமா (Cinema) என்னும் இப்படக்காட்சி மக்களுக்குச் சிறந்த வேடிக்கையாகவும் பாடங் கற்பிக்கும் வழி யாகவும் அமைந்திருக்கின்றது. இங்ஙனம் அசைவுப்படங்கள் உண்டாக்கியபின் இயக்கத்துடன் ஓசையும் சேர்க்கப் பட்டது.

இவையுமன்றி மண்ணிலும் கல்லிலும் கலந்திருக்கும் இரும்பைக் குறைந்தசெலவில் பிரித்தெடுப்பதற்கு எடிசன் ஒரு வழி கண்டுபிடித்தார். ஆக்டென் (Ogden) என்னும் இடத்தில் 1895-ஆம் ஆண்டில் இவர் முதன்முதலாக இவ் வேலையைத் தொடங்கினார். பெரிய பாறைத்துண்டுகளை உருளை களின் உதவியால் உடைத்துத் தூளாக்கி ஆற்றல் நிறைந்த காந்தங்களால் இரும்புத்தூள் மண்ணிலிருந்து வேறாகப்பிரித் தெடுக்கப்பட்டது. அங்கு கட்டிடங்கள் மின்சார ஆற்றலின் உதவிகொண்டு ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நகர்ந்து செல்லும்படி அமைக்கப்பட்டிருந்தன.

எடிசன் விடுமுறை நாட்களில் வசிப்பதற்கென கென் மாண்ட் (Genmont) என்னுமிடத்தில் ஓர் அழகிய மாளிகை கட்டியிருந்தார். இம்மாளிகையில் இவர் தமது இரண்டாவது மனைவியுடனும் மக்களுடனும் இன்புற்று வாழ்ந்துவந்தார். இவருக்கு ரஷ்யா (Russia) ஜப்பான் (Japan) முதலிய நாடுகளிலிருந்து பல பரிசுகள் கிடைத்தன. மெல்போர்ன் (Melbourne) மிலான், (Milan) பாரிஸ் (Paris) முதலிய இடங்களில் நடைபெற்ற பொருட்காட்சிகளில் எடிசனுக்குப் பல பரிசுகள் வழங்கப்பெற்றன.

எடிசன் எல்லாம்வல்ல இறைவனிடத்து மாறாத அன்பு பூண்டிருந்தார். “அவனன்றி ஓரணுவும் அசையாது” என் பது இவரது முழு நம்பிக்கையாகும். இவர் ஏழை மாணவர் களுக்குக் கல்விகற்பிக்கும் பொருட்டுத் தமது பெயரால் ஒரு நிதி ஏற்படுத்தினார். அமெரிக்காவில் இந்நிதியிலிருந்து உதவி பெற்றுப் பல இளைஞர்கள் கல்விபயின்று வருகின்றனர். எடி

சன் ஒரு காரியத்தைத் தொடங்கினால் அது முடிவுபெறும் வரை அவர் மனம் ஓய்வதில்லை. இவர் இடைவிடாது ஆய்வுகள் நடத்திக் களைத்துப்போன போதெல்லாம் இசைபாடுவதில் தமது கருத்தைச் செலுத்துவார். இவர் பல கருத்துக்களை ஆழ்ந்து எண்ணிக் கொண்டிருக்கையில் தம்மையே மறந்து விடுவதும் உண்டு. புதிதாக என்ன கண்டுபிடிக்கலாம் என்பதே இவருடைய நோக்கமாக இருந்தது. இவர் தமது ஏழாவது ஆண்டிலிருந்து ஓயாது உழைத்து எண்பத்து நான்காவது அகவையில் விண்ணுலகு எய்தினார். இவர் "செயற்கரிய காரியங்களைச் செய்துகாட்டிய பெரியார்" ஆகலின் இவர்தம் புகழ் உலகம் எங்கணும் நிலைபெற்றிருக்கின்றது.

---

## விசயநகர ஆட்சி (கி. பி. 1443—1565)

[திரு. வித்துவான் கி. சாமிக்கண்ணு முதலியார்]

விசயநகர ஆட்சி முளைத்துச் செழித்துப் பரவிவருங் காலத்தில் தஞ்சாவூர் நாட்டையும் தன்னகப் படுத்திக்கொண்டது. தங்களுடைய காரியக்காரர்கள் வாயிலாகத் தஞ்சாவூர் நாட்டை விசயநகர அரசர்கள் ஆண்டனர்.

விசயநகர முதல் மரபின் அரசரான பிரதாப தேவராயருடையனவாக, சகாப்தம் 1365-ல் (கி. பி. 1443) வரையப்பட்ட கல்வெட்டுக்கள் தஞ்சாவூருக்குச் சுற்றுப் பக்கங்களிலுள்ள கோவில்களில் உள்ளன.

தஞ்சாவூர்ப் பெரிய கோவில் தெற்குச் சூழலில், இரண்டாவது விசயநகர அரசவழியின் முதல் மன்னராகிய திருமலை தேவராயருடைய கல்வெட்டு, சகாப்தம் 1377-ல் (கி. பி. 1455) வரையப்பட்டுளது. இவ்விரண்டாவது வழியின் ஆறுவது அரசராகிய அச்சுத தேவராயருடைய ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1530—1541), சகாப்தம் 1454-ல் (கி. பி. 1532) வரையப்பட்ட ஒரு கல்வெட்டு, தஞ்சாவூர்த் தெற்கு அலங்கம் தொப்பாரங்கேட்ட பிள்ளையார் என்று சொல்லப்படும் அளகேசுவரப் பிள்ளையார் கோவில் கோபுரத்து முன் பக்கத்துச் சுவர்களிலும், சகாப்தம் 1461-ல் (கி. பி 1539) வரையப்பட்ட மற்றொரு கல்வெட்டு, தஞ்சாவூர் வடக்குக் கோட்டை வாசலுக்கடுத்த இராசகோபாலசாமிகோவில் உள்ளிருக்கையின் வெளிச்சுவர்களிலும் உள்ளன. தஞ்சாவூர்ப் புகைவண்டி நிலயத்துக்கடுத்த சமுசருப் பள்ளிவாசலில் ஒரு கற்கம்பத்தில் கல்வெட்டு ஒன்று வரையப்பட்டிருக்கிறது. அது வரையப்

பட்டகாலம் சகாப்தம் 1471 (கி. பி. 1549) என்பதாகத் தெரிகிறது. அக் கல்வெட்டால் அக்காலத்தில் சேவப்ப நாயக்கர், விசயநகர வேந்தர்களுக்கடங்கிய அதிகாரியாகவே இருந்ததாகத் தெரிகிறது.

கி. பி. 1565-ல் தலைக்கோட்டைப் போர்நடந்து, விசயநகர அரசியல் பொன்றியதன் பயனாக், அதுவரையில் அதன் காரியக்காரராகத் தஞ்சாவூரில் இருந்த சேவப்பநாயக்கர் தலைவரானார்.

## சேவப்ப நாயக்கர் (கி. பி. 1565—1577)

**தோற்றுவாய்:**—சேவப்ப நாயக்கர், தஞ்சாவூர் நாட்டை ஆண்ட நாயக்க அரசவழியைத் தோற்றுவித்தவரும், அவ்வழியின் முதல் மன்னருமாவர். இவருடைய தாதை மூதாதை முதலிய பெரியோர்கள், விசயநகர மன்னர்களின்கீழ்ப் படைத் தலைவர்களாயிருந்தார்கள். சேவப்ப நாயக்கருடைய தந்தை திம்மப்ப நாயக்கர்; தாய் வய்யமாம்பாள். விசயநகர இரண்டாவது அரசவழியில் வந்த அச்சுததேவராயருடைய மனைவி திருமலையம்மனுக்குத் தங்கையாகிய மூர்த்திமாம்பாளை இவர் மணந்துகொண்டார். இவருடைய மகன் அச்சுதப்ப நாயக்கர்.

**வரலாறு:**—அச்சுத தேவராயர், தஞ்சாவூர் நாட்டுக்குச் சேவப்ப நாயக்கரைத் தம்முடைய அதிகாரியாக ஏற்படுத்தினார். தஞ்சாவூரின் சக்கரவர்த்தி என்று தங்களைக் கூறிக் கொண்டிருந்த விசயநகர வேந்தர்கள் கி பி 1565-ல் மறைந்தொழிந்தனர். சேவப்ப நாயக்கர் தமது வலிமையினால் தஞ்சாவூரைத் தமதாக்கிக்கொண்டார்; தஞ்சாவூர்அரசர் என்று பட்டம் சூட்டிக்கொண்டார்.

**இறைமாட்சி:**—தஞ்சாவூர்க் கோட்டைக்குள் வாழும் எல்லா மக்களுக்கும் குடிநீர் எந்நாளும் நிரம்பிநிற்கின்ற சிவகங்கைக் குளத்துக்குப் பாய்ச்சல் ஏரியாகச் சேவப்பனேரியை வெட்டிவைத்தார்.

**கடவுட்கோட்பாடு :**—திருவண்ணாமலையில் கோவிலுக்கு வெளியே கட்டிவைத்த ஆழ்ந்தகன்ற குளமும், கோவிலிலே கட்டிவைத்த, மிக்க உயரமான கோபுரமும் இவரது அறங்களேயாம்.

**காலம் :**—இவர் தஞ்சாவூரின் அரசராக ஆட்சிசெய்த காலம் கி. பி. 1565 முதல் 1577 வரையிலாகும். இவர் கி. பி. 1549 முதல் 1565 வரையில் விசயநகரத் துரைத்தனத்

துக்கடங்கிய காரியக்காரராக இருந்தார். சேவப்ப நாயக்கருடைய காலத்தை அறியத் துணைசெய்யும் கல்வெட்டுக்களுள் ஒன்று, இவர் விசயநகர அரசியலின் காரியக்காரராயிருந்த காலத்தது. மற்றொரு கல்வெட்டு திருவண்ணுமலைக் கோவிலிலுள்ளது; அதில், சேவப்பநாயக்கர் அரசு செலுத்து நாளில் சகாப்தம் 1494-ல் (கி. பி. 1572) சிவநேசன், உலகநாதன் என்ற இரண்டு உடன்பிறந்தோர்களால் திருவண்ணுமலைக் கோவிலின் கோபுரங்களுள் ஒன்று கட்டிமுடிக்கப்பட்டது என்ற செய்தி கூறப்பட்டுளது.

நாட்டினளவு :—இவர் காலத்தில் இவரது நாடு திருச்சிராப்பள்ளி முதல் குணகடல்காறும், இராமசேது முதல் திருவண்ணுமலை வரையிலும் பரவியிருந்தது.

முடிவுரை :—போர்புரிந்து வெற்றி பெற்று வரும் கீர்த்தியிலும், தெய்வபக்தியினுலும் நற்செய்கையினுலும் பெறும் புகழே புகழ்என்ற கோட்பாடு உடையவர். இவர் கி. பி. 1577-ல் தமது குமாரர் அச்சுதப்ப நாயக்கருக்குப் பட்டஞ் சூட்டித் தாந்தாங்கிய அரசியற் பொறையை அவருக் குரித்தாக்கினர்.

---

* பலகலை பயின்று பண்பிற் சிறந்தே
நலம்பல புரிந்த நமசி வாய !
என்பு தமிழா யியைந்த வாக்கைய !
அன்பு மறனு நீக்கி யளியொரீஇ
விண்படர்ந் தேகினுய் வியனெறி யுரவோய் !
புண்படர் நெஞ்சின் புலம்புறுந் தமிழே ;
உரவோ யும்பர் வாழ்தி,
உரவ மியாமு முறங்குவ மீண்டே.

---

* செந்தமிழ்ப் புரவலராயிருந்த தமிழ்ப் பேராசிரியர் திரு. கா. நமச்சிவாய முதலியார் காலஞ் சென்றமை கருதி காழி. சிவ. கண்ணுசாமி B. A. பாடிய இரங்கற்பா.

# அறிவியற் பகுதி - Science

## தமிழ் எழுத்துக்களின் மறைப்பக்கம்

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர்—க. ப. சந்தோஷம்]

(முன் உசஉ-ஆம் பக்கத்தொடர்ச்சி)

எழுத்துக்கள் அடைகின்ற எடுத்தல், நலிதல், படுத்தல் என்ற மாறுதல்கள் சிருஷ்டி, திதி, சங்காரம் என்ற முத்தொழிலைக் குறிக்கும். வகர யகரங்களாகிய இரண்டெழுத்துக்களும் உடம்படு மெய்யெனப் பெயர்பெறுகின்றன. உடம்படு மெய்யென்பதற்கு ஒருயிருடன் மற்றோருயிரை இணைக்கும் மெய் என்றாவது, பிறப்பையழிக்கும் மெய்யென்றாவது பொருள் கொள்ளலாம். வகர யகரங்கள் மந்திரங்களில் அருளையும் உயிரை (ஜீவாத்மாவை)யுங்குறிக்கும் எழுத்துக்களாய் நின்று, பிறப்பறுத்து உயிர் வீடு பெறுவதைக் காட்டுகின்றன. தொழிலை விளக்குஞ் சொற்கள் வினை எனப் பெயர்பெற்று கர்மம் என்பதனைக் காட்டும். பிறவினை என்பது மற்றவர்களுடைய கர்மமாகும். தன்வினை என்பது தான் செய்யுங் கர்மமாகும். குன்றிய வினை, வினையெச்சமெனப் பெயர்பெற்று, முற்றுப்பெறாத கர்மத்தை விளக்கும். முடிந்த வினை முற்றுவினை யெனப் பெயர்கொண்டு தீர்ந்த கர்மத்தைக் காட்டும். குறிப்பு வினை என்பது, தெரியாக் கர்மமாம். தெரிநிலை வினையாவது தெரிந்த கர்மமாம். உடன்பாட்டு வினை அல்லது விதி வினை என்பது மாற்றமில் கர்மமாம். எதிர்கால வினையாவது ஆகாமிய கர்மம். நிகழ்கால வினையாவது பிராரத்வ கர்மம். இறந்தகால வினையாவது சஞ்சித கர்மம். பெயர்களடையும் மாறுதல்கள் வேற்றுமை எனப்படும். இது வினைக்கேற்ப ஜன்மம் வாய்ப்பதைக் காட்டும்.

இங்ஙனம், இலக்கணச் சொற்றொடர்கள் உண்மை இயலை வெளிப்படுத்தும் திறமை வாய்ந்தனவாய் இருக்குந் தன்மையை விளக்குதற்கு எடுத்துக் காட்டுகள் மற்றும் பல கூறலாம். இதை விடுத்து, உண்மை இயலை எளிதாக எவருங் காணக்கூடிய முறையிற் கூறுகின்ற சில தொல்காப்பிய விதிகளை ஈண்டுக் கூறுதும்:—

"வேற்றுமை தாமே யேழென மொழிப"

என்பது வேற்றுமை இயலில் முதற் சூத்திரமாகும். பொதுவாக உயிர்களுக்குக் கர்மத்தால் விளைகின்ற எழ்பிறப்பிற்கும், இதிற் கூறப்படும் ஏழு வேற்றுமைகட்கும் இங்கு ஓரொற்றுமை காணலாம்.

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"

இது வினையியலின் முதற்சூத்திரம். (வினையியலென்பது கர்மத்தின் கூறு). இச்சூத்திரத்தாற் குறிக்கப்படும் உண்மை யாதெனின், உயிர் எடுக்கின்ற பல பிறவிகளோடே கர்மமென்பது மாறுவதில்லை; அது மாறாது அடங்கி நின்று ஆகாமிய பிராரத்வ சஞ்சித என்ற மூவகையில் எதைச் சார்ந்ததோ அதற்கேற்பக் காலம் பார்த்து நிற்கும், என்பது.

இதையொத்த கருத்து, "வேற்றுமை வழிய பெயர் புணர் நிலையே," என்ற புணரியற் சூத்திரத்தால் வெளியிடப்படுகின்றது.

"மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே"

இது முதலதிகாரத்திலுள்ள சூத்திரங்களி லொன்றாகும். இலக்கண முறையி லிதன் பொருள் வெளிப்படை. இதனைற் குறிக்கப்படும் உயிர்பற்றிய உண்மையுங் காண்பதற்கெளிதே. உயிர்களை நோக்குங்கால் அவைகளுக்குள்ள வேற்றுமை உடம்பைக் கொண்டல்லது வேறுவகையில் அறியப்படாது. க் என்ற மெய்யெழுத்து ஒரு குயிலின் உடலைக் குறிப்பதாக வைத்துக்கொள்வோம். இதில் 'ஊ' என்ற உயிரை ஏறச் செய்வோம். இதனைல் பெறப்படுகின்ற உயிர்மெய் 'கூ' என்பது. ஈண்டுக் குயில் கூவு மென்பதைப் பார்க்கின்றோம். மகர ஒற்றை ஒரு பூனையின் உடம்பாக வைத்துக் கொள்வோம். இதில் நாம் முன்னெடுத்துக்கொண்ட ஊகார உயிர் ஏறுமாயின் மூ என்ற உயிர்மெய் பிறக்கின்றது. இரண்டிடத்திலும் ஊகாரமே உயிராயினும், புகு முடலிற்கேற்ப அது வேறுபடுகின்றது.

உயிர் அல்லது ஜீவாத்மா உடம்பின் வழியடங்குவதை, "மெய்யின் வழிய் துயிர் தோன்று நிலையே" என்றுரைப்பதைக் காட்டிலுந் தெளியக் கூறலாங்கொல்? இவை எதிர்பாராது நேரும் ஒற்றுமைகளல்ல.

'புள்ளியீற்று முன்னுயிர் தனித்தியலாது
மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே"
"மெய்யுயிர் நீங்கிற் றன்னுருவாகும்".

இவை உயிரொடு உயிரும், உயிரொடு மெய்யும், மெய்யோடு

மெய்யும்சேர்கின்ற விதிகளைக்கூறும் புணரியலிற் காணப்படும் சூத்திரங்கள். இவற்றால் குறிக்கப்படுகின்ற உயிரை யொட்டிய உண்மைகளையும் நாம் தெற்றெனக் காணலாம். யாண்டாயினும் உயிர் உடம்பிற் புகுமாயின், அது தன்னியல்பு கெடாது காத்தலரிது; உடம்போடு ஒன்றாகும். உயிர் உடம்பை விட்டு நீங்கிடுங்கால் உடம்பு தன் பழைய நிலையை யடையும்.

இலக்கண வகையில் எழுத்துக்களுக்குக் கூறப்படும் விதிகள், மந்திர வகையில் அவ்வெழுத்துக்களுக்குக் கூறப்படும் விதிகளோடு பொருந்தியிருப்பதை விளக்கச் சில எடுத்துக் காட்டுகள் கூற வேண்டியதாகின்றது.

> "எல்லா மொழிக்கு முயிர் வருவழியே
> யுடம்படு மெய்யினுருவு கொளல் வரையார்"

இது நிலைமொழி ஈற்றிலும், வருமொழி முதலிலும் உயிரிருந்தால் அவ்விரண்டு சொற்களும் புணருந் தன்மையைக் கூறுமொரு சூத்திரமாகும். வருமொழி முதலிலுள்ள உயிர், நிலைமொழியீற் றுயிர்முன் மாறாது நிற்றல் கூடுமாயினும், வருமொழி முதலிலுள்ள உயிர் யகர வகரங்களாகிய உடம்படு மெய்களிற் புகுவதை மேலோர் விலக்கார் என்பது இலக்கண வகையி லிதன்பொருள். உயிரைப்பற்றிய உண்மை கூறும் வகையி லிதன் பொருள் யாதென்று பார்ப்போம். ஈண்டு வருமொழி முதலுயிர் ஜீவாத்மா அல்லது பசுவைக் காட்டுவதாகும். நிலைமொழியீற்றுயிர் பரமாத்மா அல்லது பதியைக் குறிப்பதாகும். பதிமுன் பசு தன்னியல்பு கெடா வண்ணம் நிற்றல் கூடுமாயினும், வருமுயிராகிய ஜீவாத்மாவை நிலையுயிராகிய பரமாத்மா அல்லது பதியொடு புணர்த்த வல்ல யகர வகரங்களாகிய உடம்படு மெய்கள் அல்லது தனியுடம்புகளில் அது புகுதல் விலக்கப்படாது. இங்கே உடம்படு மெய் யென்ற சொற்றொடர் இலக்கணத்திலும் உண்மையியலிலும் எப்பொருளில் வழங்கப்படுகிற தென்பதையும் விளக்க வேண்டியதாகின்றது. உடம்படு மெய்யென்பது 'உடன்படு. மெய்' என்பதோடொன்றாகி நிலைமொழியீற்றுயிரையும் வருமொழி முதலுயிரையும் உடன்படுத்தும் மெய்யாகுமென்று பொதுவாகப் பொருள் கூறுவர். இவ்விரண்டெழுத்துக்களும் மந்திர வகையில் கொள்ளும் பொருளைக்கருதுங்கால் உடம்படு மெய்யென்ற சொற்றொடரின் மற்றொரு பொருள் தோன்றுகின்றது. உடம்படு மெய்யென்பது உடம்பு—அடும்—மெய் எனப் பிரிந்துநின்று, இலக்கணவகையில், மற்ற மெய்களை அழிக்கும் மெய்யென்றும், உண்மையியல் வகையில், பிறப்பறுக்கும் வடிவமென்றும் பொருள்படும். (தொடரும்)

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

## மகாத்மா காந்தி அடிகளுக்கு ஓர் பகிரங்கக் கடிதம்

ஐயா,

இப்போது இந்தியாவிற்கு ஓர் பொதுமொழி கோல வேண்டுமென்று பாடுபடுவோருள் தலையாயராய் நிற்பவர் தாங்களே என்று அறிகிறேன். உலகுடன் பழகுவதற்கும் தொழில் நடத்துவதற்கும் பெரும்பான்மையோர் உலகெங்கும் நன்கு அறிந்த ஒரு மொழியைக் கற்றறிதல் வேண்டுமென்ற தங்கள் கிளர்ச்சி பெரிதும் போற்றற்குரியதே. தாங்கள் கொண்ட இப்பொதுநலப் பெருநோக்கம் இப்போது இயங்கிக்கொண்டிருக்கும் இந்திமொழிக் கட்டாயக் கல்வியால் ஒருவேளை சிதைவுறுமோ என்று நினைந்து வருந்துகின்றேன். தாங்கள் எடுத்துக்கொண்ட இவ்வரும்பெரும் இயக்கத்தின் இரகசியத்தை அறியாத சிலர் இந்திமொழியே இந்தியாவிற்குப் பொதுமொழியாக வேண்டுமென்ற பெரு முயற்சியில் ஈடுபட்டு விட்டனர்.

பொதுநலப் பிரியரான தாங்கள் இப்போது இந்திய மக்களிடத்துக் காணப்படும் ஏழ்மை நிலையை நன்குணர்ந்து, அவர்கள் அனைவரையும் உன்னத நிலைக்குக் கொண்டுவர ஒரு பெரும் அரிய முறையைக் கையாண்டீர்கள். அதன் உண்மை இதுவென உய்த்துணர மாட்டாத சிலர் "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே" என்று தாங்கள் நினைந்து வருந்தக்கூடிய முறையில் இறங்கிவிட்டார்கள். இந்திமொழியைக் கட்டாயக் கல்வியாகக் கற்கவேண்டுமென்ற கிளர்ச்சியை உண்டுபண்ணியாவது இந்திய மக்களுக்குத் தங்கள் தங்கள் தாய்மொழியைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற உரிமை உணர்ச்சியை அடிகோலிவைக்கலாமென்ற தங்கள் பெருந்தன்மையான நோக்கத்தை அறியமாட்டாதவர்களாய் மலைவுறுகின்றனர்.

இப்போது இந்தியாவிற்குப் புதிதாக ஒரு பொதுமொழி வேண்டுவதில்லையென்பதும், இதுபோழ்து பொதுமொழியாக இருந்துவரும் ஆங்கிலமே போதுமானதென்பதும், ஒரு மொழி பேசுவோரிடத்துக் காணப்படும் குறைபாடுகளையோ வெறுக்கத்தக்க செயல்களையோ அவர்கள் பேசும் மொழியின்

பாற் காட்டக்கூடாதென்பதும் நடுநிலை திறம்பாத தங்களுக்கு ஒத்த சம்மதமாகவே தோன்றுமென நம்புகிறேன். தங்கள் கிளர்ச்சியின் பயனால் ஏற்பட்ட இவ்விந்திமொழிக் கட்டாயக் கல்வியின் இரகசியத்தைத் தாங்களே மறுபடியும் எடுத்து விளக்கிச் சொன்னாலொழிய, இத்தீவிர முயற்சியினின்றும் சில விடாப்பிடியினர் விலகார் என்று கருதியே இதனைத் தாங்கள் அறியுமாறு வெளியிடுகின்றேன்.

எனவே, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மொழி பேசுவோரும் தத்தம் மொழிகளையே கட்டாயக் கல்வியாகக் கற்கவேண்டு மேன்றும், தாய்மொழியில் தேர்ச்சிபெற்ற பின், பலமொழி பயில விரும்பும் தனி மனிதர்கள் இந்திமொழியையோ இன்னும் வேறுபல மொழிகளையோ கற்கலாமென்றும், இப்போது பொதுமொழியெனக் கருதப்பட்டு வழக்கிலிருக் கும் ஆங்கிலமே எதிர்கால இந்தியாவிற்கும் பொதுமொழி யாக நின்று பயன்தரத் தக்கதென்றும், இந்திய மக்கள் தங்களுக்குக் கிடைத்துள்ள அரிய காலத்தை இந்திமொழிக் கட்டாயக் கல்வியில் செலவிடுதல் முறையல்லவென்றும் எழுதப்பட்ட ஓர் பொதுநல அறிக்கையைத் தாங்கள் வெளி யிட்டு உதவுவீர்களானால், அது, இந்திய மக்களுக்காகத் தாங்கள் செய்துள்ளனவும் செய்யப் போவனவுமான பேருத விகளில் தலைசிறந்து விளங்குவதோடு தங்கள் புகழ் வானளவும் அதற்கு அப்பாலும் சென்று என்றும் மாறா நிலைபேறுடைய தாகும்.

| | |
|---|---|
| 1—3—'37<br>அறிவுதயக் கழகம்,<br>வஞ்சியம்மன் கோயிற் றெரு,<br>கருவூர். | இங்ஙனம்<br>தங்கள் அன்புள்ள,<br>**ஈழத்துச்சிவானந்த அடிகள்.** |

---

பூவாளூர் சைவசித்தாந்த சங்கத்தின்

# 27-ஆம் ஆண்டு நிறைவு விழா

அவைத்தலைவர் உயர்திரு.

சித்தாந்த ஆசிரியர் ந. சிவகுருநாத பிள்ளையவர்கள் நிகழ்த்திய

## முன்னுரை

"குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய வெடுத்த பொற்பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதேயிந்த மாநிலத்தே"

அறிவினும், திருவினும் சிறந்த பெரியீர்!

பொன்னாட்டினு முயர்ந்த நன்னாடிதுவெனப் பன்னாவலர் புகழும் சோழவளநாட்டிலே, செந்திருமாதும், வெண்டிருமாதும் சேர்ந்துறையுங் காரணத்தால் "பூவாளூர்" எனப் பெயரிய இத்திருநகரிலே எல்லாம்வல்ல இறைவன் திருவருட்டுணைகொண்டு நடாத்தப்பெற்று வரும் சைவசித்தாந்த சங்கத்தின் இருபத்தேழாம் ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடி மகிழுதற்பொருட்டு நீங்களெல்லீரும் குழுமியிருக்கின்றீர்கள். இப்பேரவைக்குத் தலைமைபூணச் சங்கத்தார் அடியேனுக்கு ஆணை தந்தார்கள். அடியேன் வயதளவில் முதியோனாயினும் கல்வியறிவு ஆற்றலில் மிகச்சிறியேன் என்பதைச் சங்கத்தார் நன்கறிந்திருந்தும் இவ்வாறு பணித்தமைக்கு ஏது, அடியேன் பல ஆண்டுகளாக உயர்வொப்பில்லாச் செந்நெறியாகிய சித்தாந்த சைவத்துக்குச் சிறு தொண்டாற்றிவருவது பற்றியேயாகும் என்று துணிகின்றேன்.

இனி "ஏழைய ரிருகாற் பசுக்கண் மற்றிவரால் இயன்றிடத் தக்கதொன்றிலையே" என்றபடி அடியேனாற் செய்யத் தக்கது யாதுமில்லை. "கருவிகளனைத்துமென்னுட் கலந்து நின்றியக்காநின்ற, ஒருவனையின்றி யானே உஞற்றுதலின்மையாலே" அவன் காட்டும் வழிநின்று எனக்குக் கொடுத்த தலைமைப்பணியை ஆற்றத் துணிகின்றேன். பேரவையின் தலைவராவார் தலைமையுரை யொன்று நிகழ்த்துதல் ஆன்றோர் மரபாகலின் அம்முறைபற்றி யானும் ஒருரை நிகழ்த்தவேண்டியவனாதலின் முன்னுரை என்று பெயரிய இச் சிற்றுரையை இங்கே நிகழ்த்துகின்றேன். பிழைபொறுத்தல் சால்புடைய உங்கள் கடனாதலின் அவையடக்கம் மிகையேயாகும்.

அன்பர்களே!

நமது நாட்டில் சில ஆண்டுகளாக எங்குபார்த்தாலும் "சுயராச்சியம்" "சுயராச்சியம்" என்னும் ஒலிப்பெருக்கம் நமது காதுகளைச் செவிடுபடச் செய்கின்றது. சுயராச்சியத்தின்பொருட்டு நமது மக்கள் செய்யும் தியாகங்கள் அளப்பில; அடையும் துன்பங்கள் பலப்பல. கற்றோரும் மற்றோரும் இரவு பகலாய் அதன்பொருட்டே உழைத்து வருகின்றார்கள். இத்துணை அரும்பாடுபட்டு நாம் இனி அடையப்போகும் சுயராச்சியம் தான் யாதோ எனின்; நமது தேசத்தை நமக்கு வேறுபட்ட மற்றொரு நாட்டார் ஆட்சி செய்து, நம்மைக் கீழ்மைப்படுத்தி, நமது தேசத்துச் செல்வங்களையெல்லாம் தம் நாட்டுக்குக் கொள்ளைகொண்டு போகின்றார்களாதலின்

அவற்றைத் தடுத்து நமது தேசத்தை நமக்கே சொந்தமாக்கிக் கொள்ளல் வேண்டுமென்பதேயாம்.

இனி, நாம் சுயதேசம் என்று பாராட்டும் இந்தத் தேசம் நமக்கு எவ்வளவு காலமாகச் சொந்தமாகவுள்ளது? இந்தத் தேசத்தில் இனி நாம் எவ்வளவு காலம் வீற்றிருப்போம்? என்பனவற்றை உண்மையாக ஆராய்வோமாக.

நாம் என்னும் சொல்லுக்குரிய பொருள் ஆன்மாவே. ஆன்மா அநாதியிலேயே ஆணவமலத்தோடு சேர்ந்துள்ள காரணத்தால் அறியாமையுட்பட்டுத் துன்புறுவதால் அம் மலத்தைப் போக்குதற்கு கன்மம் மாயை என்னும் இருமலங்களையும் பேரருளுடைய இறைவன் ஆன்மாக்களுடன் கூட்டுவித்தான். ஆன்மாக்கள் மாயையின் காரியங்களாகிய தனு கரணம் புவனம் போகம் என்னும் உடல், கருவி, உலகம், புசிக்கப்பெறும் பொருள்களைச் சார்ந்து நல்வினை தீவினைகளாகிய கன்மங்களைச் செய்கின்றன. இவ்வினைகள் ஆன்மக்களால் ஆணவமலத்தின் சார்பால் 'யான்' 'எனது' என்னும் செருக்குடன் செய்யப்பெறுவதால் அவ்வினைகள் ஆகாமியம் என்னும் பெயருடன் அவற்றைச் சார்கின்றது. இங்ஙனம் ஈட்டப்படும் ஆகாமியங்களெல்லாம் சேர்ந்து சஞ்சிதம் என்னும் பெயரால் ஒரு களஞ்சியமாகத் தொகுக்கப்படுகின்றன. பின் பிராரத்தம் என்னும் பெயருடன் அவை அநுபவத்துக்கு வருகின்றன. "தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னைவீயாதடியுறைந்தற்று" "அழக் கொண்டதெல்லாம் அழப்போம்" என்னும் பொய்யாமொழிகளின்படி வினைகளைச் செய்தோர் அவரவர்செய்த வினைப்பயன்களை அநுபவித்தே தீரவேண்டும் என்பது விதிச்சட்டமாதலின் அவரவர்செய்த வினைகளின் பயனுக அவ்வவற்றிற்கேற்ப இறைவன் தனு கரண புவன போகங்களைக் கொடுக்கிறுன். இனி, தனு கரண புவன போகங்கள் ஒன்றுபோல் இல்லாமல் அவரவர் செய்த வினைகளுக்கேற்ப எத்துணையோ வேறுபட்டவைகளாக இருக்கின்றன. இம்முறையிலே நாம் இந்தத் தேகத்தையும் இந்தத் தேச முதலியவைகளையும் அடைந்திருக்கின்ருேம். தேகம் எப்பொழுதும் நிலையாகவுள்ளதன்று "கருவினுள்ளழிவதாயும் கழிந்திடாதழிவதாயும், பரிணமித்தழிவதாயும் பாலனுயழிவதாயும், தருணனுயழிவதாயும் தானரைத்தழிவதாயும்" உள்ள நிலையாமையுடையது; "வினைப்போகமே யொரு தேகங்கண்டாய் வினைதானொழிந்தாற்றினைப்போதளவும் நில்லாது கண்டாய்" என்றபடி எடுத்த வுடலில் அநுபவிக்கவேண்டிய போகங்களை அநுபவித்து முடிந்தவுடன் உடல் நீங்கிவிடுகின்றது. உடல்

நீங்கவே அதனோடு தொடர்புடைய புவன போகங்களும் நம்மைவிட்டு நீங்கிவிடுகின்றன.

அன்பர்களே !

இவ்வுண்மையைக்கொண்டு நாம் நோக்குவோமாயின் இந்தத் தேசம் நமக்கு முன் சொந்தமாக இருந்ததில்லை; எதிர் காலத்திலும் நமக்குச் சொந்தமாக இருக்கப்போவதில்லை. நம்மைப்போல் எத்துணையோபேர்கள் முன் இந்தத்தேசத்தை தமக்குச் சொந்தம் சொந்தம் என்று நினைத்து நீங்கிப் போயிருக்கின்றார்கள். நமக்கும் அவ்வாறேதான் ஆகப்போகின்றது. ஆதலின் தேசப்பற்று ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டியதும், தமது தேசத்தைப் சொந்த ஆட்சியில் வைத்துக்கொள்ள வேண்டியதும் ஒருவகையில் நமக்குக் கடப்பாடேயாயினும் நாம் செய்யவேண்டிய தலைமையாகிய கடமையை அறவே மறந்து நிலையில்லாச் சம்பந்தமுடைய தேசத்தின்பொருட்டே இரவு பகலாய் உழைத்து உழைத்து நமக்கு அருமையாகக் கிடைத்த இந்தப் பிறவியை இழந்து விடுதல் தக்கதன்றென் பதே எனது கருத்தாகும்

இனி, ஆன்மக்களாகிய நாம் தலைமையாகச் செய்யவேண்டிய கடமை யாது என்பதை ஆராய்வோம். அது நமது ஆன்ம சுயராச்சியத்தின் பொருட்டுப் பாடுபடவேண்டியதேயாகும். ஆன்மாவின் உண்மையான நிலையை ஆராய்வோமானால் அது அறிவுடைய பொருள்; வியாபகமுடைய பொருள்; பிறப்பு இறப்பில்லாத பொருள் அங்ஙனமாகவும் நமது ஆன்மநிலை இப்பொழுது எவ்வாறிருக்கின்றது என்பதைச் சிந்தியுங்கள். இயற்கையில் அறிவுடையவர்களாக இருக்கவேண்டிய நாம், அறியாமையுடையவர்களாயிருக்கின்றோம். எங்கும் விளங்கவேண்டிய நமது வியாபகத் தன்மை மறைந்து ஏகதேசப்பொருளாக (கண்டப் பொருளாக) இருக்கின்றோம். பிறப்பு இறப்பு அற்றிருக்கவேண்டிய நாம் கொள்ளிவட்டமும் காற்றாடியும்போல ஓயாது பிறப்பினும் இறப்பினும் சுழன்றுகொண்டிருக்கிறோம். இவ்வாறு நமது இயல்புகளை ஒழித்து நம்மை அல்லற்படுத்தும் பொருள்கள் யாவை? அவைதான் ஆணவம், கன்மம், மாயை என்று சொல்லப்படும் மும்மலங்களாகும். அவை நமக்கு வேற்றுச்சாதிப் பொருள்கள். நாம் அறிவுடைய சாதி; அவை அறிவில்லாத சாதி. வேற்றுச்சாதியாகிய மலம் என்னும் பகைஞர்கள் நமது ஆன்மராச்சியத்திற் புகுந்து செய்யும் கொள்ளைகளும், துன்பங்களும் அளப்பில. நமது இயல்பாகிய அறிவுத்தன்மையைக் கெடுத்து அறியாமையைச்செய்துவிட்டனர். நாம் வியாபகமாய் விளங்கி வியாபகத்துட்பட்ட எல்லாப் பொருள்களையும் அநுபவிக்க

வேண்டியவர்களாகவிருக்க நமது வியாபகத்தன்மையை அடியோடு கெடுத்து ஏகதேசத் தன்மையைச் செய்துவிட்டார்கள். சுதந்தரமாக இயங்கவேண்டிய நமது அறிவிச்சை செயல்களைக் கெடுத்துப் பரதந்திரப்படுத்தி விட்டார்கள். நம்முடைய சுய ரூபத்தையும் நடையுடை பாவனைகளையும் கெடுத்து தமது ரூபத்தையும் நடையுடை பாவனைகளையும் பற்றும்படி செய்துவிட்டார்கள். நமது அருட்குணங்களைக் கவர்ந்து தமது மருட்குணங்களை நம்மைப் பற்றும்படி செய்துவிட்டனர். பிறப்பும் இறப்புமின்றி இருக்கவேண்டிய நம்மைத் தரையிலும், கீழ் மேலுலகங்களிலும் ஓயாது பிறந்திறந்துழலும்படி செய்துவிட்டார்கள். இன்ப சொரூபராயிருக்க வேண்டிய நம்மை ஓயாக் கவலை பிணியென்றிவற்றுள் மூழ்கும்படி செய்துவிட்டனர். அந்தோ! இவை மட்டுமா! நமக்கு இனியராய், நம்மோடு யாண்டும் இமைப்பொழுதும் அகலாது அத்துவிதமாய்க் கலந்திருக்கும் சிவபரம்பொருளையே நமக்குத் தெரியாமல் மறைத்து விட்டார்கள். முடிவாகச் சொல்வோமானால் நம்மையே நாம் உணராவண்ணம் செய்துவிட்டார்கள்.

அன்பர்களே!

இங்ஙனம் மலமென்னும் பகைஞர்கள் நம்முடைய ஆன்மராச்சியத்தில் புகுந்து தமது மருட்குணங்களாகிய பீரங்கிகளாலும், ஆறுகோடி மாயாசத்திகளாலும் நம்மைக் கீழ்மைப்படுத்தி நமது வியாபாரத்தையெல்லாம் கெடுத்து தமது வியாபாரத்தை இறக்குமதி செய்து நாம் அடையவேண்டிய பேரானந்தப் பெருஞ்செல்வத்தை அடையவிடாமல் தடுத்து அல்லலே செய்துகொண்டு வருகின்றார்கள். இவற்றையெல்லாம் நாம் சிறிதும் சிந்தியாமலும், அவற்றைத் தடுப்பதற்கு முயலாமலுமிருக்கின்றோமே! ஒரு சிறிது காலம் நமக்குத் தொடர்புடைய இத் தேசத்தின் பொருட்டு அரும்பாடுபட்டு வரும் நாம் ஆன்ம சுயராச்சியத்தின் பொருட்டுச் சிறிதும் சிந்தனை செய்வதில்லையே! அன்பர்களே, இனி நம்மைக் கீழ்மைப் படுத்தும் நமது பகைஞர்களாகிய மலங்களை ஆன்ம இராச்சியத்தினின்றும் ஓட்டவேண்டாமா? அதற்கு நாம் யாது செய்தல் வேண்டும்? முன்னர் மலமாகிய பகைஞர்களை ஓட்டிய அநுபவமுடைய பெரியார்களின் அறிவுரையை நாம் கேட்டல் வேண்டும்; அவ்வழி யொழுகுதல் வேண்டும். இனி அத்தகைய பெரியார்கள்தான் யாவரென்னில்; அவர்கள் தான் நமது சமயாச்சாரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், ஸ்ரீசுந்தரமூர்த்திகள், ஸ்ரீமணிவாசகர் என்னும் நான்கு பெருமக்கள். அவர்களால் அருளிச் செய்யப்பெற்றுள்ள தேவாரம் திருவாசகம் என்னும் அருள் நூல்களில் மலமாகிய

பகைஞர்களை வெல்லுவதற்குரிய உபாயங்கள் பலப்பல கூறப் பெற்றிருக்கின்றன.

மலசத்தியும், நமது ஆன்மசத்தியும் ஒப்புடையனவாதலின் நம்முடைய சத்தியினாலே மலசத்தியை வெல்லமுடியாது. மலசத்திக்கு மேற்பட்ட அளவில்லாத ஆற்றலுடைய இறைவனது ஆற்றலைத் துணைக்கொண்டே மலமாகிய பகைஞர்களை, நாம் ஒட்டல்வேண்டும். ஆதலின் அன்பர்களே, இறைவன் திருவருட்சத்தியைத் துணையாகக் கொண்டு,

"ஞானவா ளேந்துமையார் நாதப் பறையறைமின்
மானமா ஏறுமையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவச மடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப் படைவாராமே"

என்று ஸ்ரீமாணிக்கவாசகப்பெருமான் கூறியபடி படையெடுத்துப் பகைஞரை ஒட்டி நாம் வெற்றிமாலை சூடுவோமாக. இங்ஙனம் நமது ஆன்மராச்சியத்தை நமதாகச் செய்து நமது ஒப்பற்ற தந்தையாராகிய சிவபரம்பொருளின் பேரானந்தப் பெருஞ்செல்வத்தையடைந்து இனிது வாழ்வோமாக. இதுவே நாம் அடையவேண்டிய உண்மையான சுயராச்சியம். இதுவே நமது மனிதப்பிறப்பின் குறிக்கோள். இதன் பொருட்டே நமது உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்தல் வேண்டும்.

அன்பர்களே!

இதுகாறும் எனது புன்மொழிகளைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த நுங்கட்கும், சங்கத்தாருக்கும் நன்றி செலுத்துகின்றேன்.

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்பமில்லைத்
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர்காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க்
கொய்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே" —அப்பர்

## 27—2—37

## சிவஞான சித்தியார்

மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக்காய
மானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்ப
ரூனெடுத் துழலு மூம ரொன்றையு முணரா ரந்தோ.

## புதுக் கவிகள்-Original Poetry

### தமிழ்நாட்டு வணக்கம்

[கொடுமுடி வித்துவான் பெ. கோவிந்தன்]

தாமரைநன் முகங்காட்டித் தண்டளவ
நகைகாட்டித் தளிர்க்கை யாட்டிக்
காமர்கரு விளக்கணிமைத் தெமைமடிமேல்
விளையாட்டுங் கன்னி நாடே!
பூமருவு பொழில்மல்கு தமிழ்நாடே!
எமையீன்று போற்றும் நாடே!
தூமலர்தூய் நினதுதிரு வடியிணையை
முடிவணங்கித் தொழுதல் செய்தும். 1

ஒருபால்நன் னீராட்டி யெமக்கொருபால்
காய்கனிக ளூட்டி யோர்பால்
மருவார்மென் மலர்சூட்டி யிசைகாட்டி
மகிழூட்டி மகிழும் நாடே!
திருவார்செந் தமிழுணர்த்துந் தென்னாடே!
பொன்னாடே! தெய்வ நாடே!
ஒருவாதன் பாலடியாம் இருபோதை
முப்போதும் உளத்திற் கோடும். 2

மென்றழையால் மெய்தழைவித் தருமலரால்
முகமலர்த்தி விரையும் தேனும்
துன்றுகனி யால்நெஞ்சங் கனிவிக்கும்
எழுதுதமிழ்த் தூய நாடே!
ஒன்றிதுவன் றுறைவிடமும் அணியுடையும்
தமிழறிவும் உதவும் நன்றை
இன்றுணர்ந்தேம்; கைம்மாறுக் கென்னுடையேம்?
இறைஞ்சலொன்றே ஈண்டுச் செய்தும். 3

மலைவளமுங் கடல்வளமும் வயல்வளமும்
பொழில்வளமும் வழங்கி மற்றை
விலைவளமுங் கலைவளமும் பொருள்வளமும்
எமக்களித்து விளங்கும் நாடே!
நிலைபெறுவான் வெங்கதிருந் தண்கதிரும்
வலியிழந்து நிலையில் மாறி
உலைவுறினும் நிலைபெறுக நீயுஞ்செந்
தமிழணங்கும். உளத்துக் கோடும். 4

உழுந்தோறும் உணவளித்தும் அகழ்ந்தோறும்
நீரளித்தும் உதவி மேலே
விழுந்தோறும் எமைத்தாங்கி எழுந்தோறும்
உயர்வித்து விளங்கும் நாடே!
செழுந்தேறல் வழிந்தோடச் சேலுளுவை
எதிர்ந்தோடச் செந்நெல் தென்றற்
கொழுந்தோட மகிழ்ந்தாடுந் தமிழ் நாடே!
தொழுதன்பு கொண்டு வாழ்தும். 5

பூவிரியும் மரமுதலா மனைத்துயிர்க்கும்
பலகாலால் போய்நீர் நல்கும்
காவிரிவை கைபெண்ணை பொருநையினை
ஒழுக்குதமிழ்க் கன்னி நாடே!
ஓவியமொன் றினில்நின்றன் ஒழுக்கினையும்
உதவியையும் உணர்த்தும் பாடும்,
பாவிலுணர்த் தும்பாடும் பெற்றேமில்
லேந்; தாளைப் பணிதல் செய்தும். 6

அறநெறியில் முறைசெய்த அரசர்களை
ஈன்றெடுத்த அரிய நாடே!
பிறரைமனத் தெண்ணாத பெண்டிர்களை
ஈன்றெடுத்த பீடார் நாடே!
புறமகமாந் திறமுணர்ந்த புலவர்களை
ஈன்றெடுத்த புகழ்சால் நாடே!
மறமிகுந்த மள்ளர்களை ஈன்றெடுத்த
தமிழ்நாடே! வணக்கஞ் செய்தும். 7

கடல் கடந்தும் நிலங்கடந்தும் பகைவர் படைக்
கடல்கடந்த காமர் நாடே!
இடர்கடந்தும் மிடிகடந்தும் இலங்குதமிழ்க்
கடல்கடந்த இனிய நாடே!
தொடர்கடந்தும் மடங்கடந்தும் துலங்கறிவுக்
கடல்கடந்த தூய நாடே!
உடல்கடந்தெம் உளங்கடந்தெம் உயிர்கடந்த
புகழ்க்கடலில் உள்ளஞ் சேர்த்தும். 8

வடபுலத்துக் கடவுளர்கள் பிறக்குமுனம்
பிறந்துரமும் வனப்பும் வாய்ந்து
கடனுடுத்துப் பூப்பெய்தி மகவீன்று
கலையுணர்த்திக் களித்த நாடே
உடலெடுத்த எமக்குமெமைப் பெற்றோர்க்கும்
உற்றார்க்கும் உற்றா ரோடு
தொடர்படுத்த தொல்குடிக்குந் தாய்நாடே
தமிழ்நாடே தொழுதல் செய்தும். 9

பொய்யுரையா வள்ளுவமெய்ப் புலவனைப்பெற்
றனைத்துலகும் புகழ வாழ்க்கை
செய்யுமுறை கலையெல்லாந் தெரிவிக்குந்
தமிழ்நாடே தெய்வ நாடே!
பொய்யருரை மெய்யென்று மனத்திருத்தி
இகழ்வெய்திப் புகழ்விட் டேமுக்
கையமறக் குறளுணர்த்தி நெறிப்படுத்தென்
றுரைசெய்துன் னடியைக் கோடும். 10

## குறுந்தொகை மொழிபெயர்ப்பு

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியார் அவர்கள், M. A., B. L.]

(முன் ௩௧௦-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### 29. குறிஞ்சி

*நல்லுரை யிகழ்ந்து பல்லுரைத் தாஅய்ப்*
*பெயனீர்க் கேற்றன பசுங்கலம் போல*
*உள்ளந் தாங்கா வெள்ள நீந்தி*
*அரிதயர் வுற்றனை நெஞ்சே என்றும்*
*பெரிதா லம்மநின் பூச லுயர்கோட்டு*
*மகவுடை மந்தி போல*
*அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே.*

—ஔவையார்,

29. Not heeding good advice and holding by evil, O heart, thou art like the fresh-made unbaked pot receiving rain water! with thee so full of grief, I am tired out swimming the ocean of misery. Would that you had comforters that would cling to thee like the young one to the mother monkey on the tall boughs, for great is thy affliction for ever and ever.

—**Auvaiyar**

### 30. பாலை

*கேட்டிசின் வாழி தோழி யல்கற்*
*பொய்வ லாளன் மெய்யுற மரீஇ*
*வாய்த்தரு பொய்க்கனா மருட்ட வேற்றெழுந்*
*தமளி தைவந் தனனே குவளை*
*வண்டுபடு மலரிற் சாஅய்த்*
*தமியேன் மன்ற வளியன் யானே.*

— கச்சிப்பேட்டு நன்னாகையார்.

30. Hail comrade! hail and listen! deceived by the false dream of my charmer embracing me, I rose up

and searched the bed with my hands, and found myself alone! like the flower that the bee has despoiled, I am much to be pitied.

—**Kachipettu Nan-Nagiar.**

31. மருதம்

*மள்ளர் குழீஇய விழவி னானும்*
*மகளிர் தழீஇய துணங் கையா னும்*
*யாண்டுங் காணேன் மாண்டக் கோனை*
*யானுமோ ராடுகள மகளே யென்கைக்*
*கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த*
*பீடுகெழு குரிசிலுமோ ராடுகள மகனே.*

—ஆதிமந்தியார்.

31. Neither in the gathering of Heroes, nor where women dance with arms akimbo, do I see the noble Hero! In so seeking and running after him, I seem to be a dancer; like-wise is He, full of nobility, love for whom has made my wrists shrink and the wristlets slip!

—**Adi Mandhi-yar.**

32. குறிஞ்சி

*காலையும் பகலுங் கையறு மாலையும்*
*ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்*
*பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்*
*மாவென மடலொடு மறுகிற் றோன்றித்*
*தோற்றெனத் தூற்றலும் பழியே*
*வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே.*

—அள்ளூர் நன்முல்லையார்.

32. Spurious is the love that can note clearly the distinction between Morn, Noon, restful Eve, Midnight when all are fast asleep, and the Early Dawn! It is a shame to challange me to prove my love by mounting the palm-frond like a horse in the open street as it would be a shame to me to out-live my Beloved!

—**Allur-Nan-Mullai-yar.**

### ஈ தின்னிச் செடி

வட அமெரிக்காவில் "வீனஸ் ஈப்பொறி" என்ற ஒரு விதமான செடி வளருகிறது. அதன் இலைகளின் நீண்ட காம்பின் நுனியில் இரு பக்கங்களிலும் புத்தகத்தின் இதழ்கள் போன்றிருக்கின்றன. அவற்றின்மீது கூரிய கயிறுபோன்ற முனைப்புகள் காணப்படு கின்றன. ஈக்கள் அவற்றின்மீது உட்காரும்போது இலைகள் இரண்டும் மூடிக்கொண்டு ஈயைச் சாப்பிடுகின்றன.

### நூல் வருவாய்

ஜெர்மனிதேசத்து வல்லரசான ஹிட்லர் ஒரு புத்தகம் எழுதி அவரே அதனை வெளியிட்டுப் பள்ளிக்கூடப் பிள்ளைகள், புத்தக சாலைகள், உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் படிக்கவேண்டுமென்று உத்தரவு செய்து விட்டார். இதுவரை சுமார் இருபத்தைந்து லட்சம் பிரதிகள் விற்பனையாய்விட்டன. அதனால் அவர் லட்சாதிபதியாய் விட்டார். புத்தகத்தின் பேர் மீன் காம்ப். நாசித் தலைவரான ரோசன்பர்க், கோபல்ஸ் இருவர் புத்தகங்களும் ஏராளமாக விற்பனை யாகின்றனவாம்.

---

"ஒரு மொழியிலுள்ள அரிய பொருள்களையுங் கருத்துக்களையும் எல்லா மொழிகளுக்கும் பொதுவாக்கிக்கொள்ளுதல் சிறந்த நோக்க மாகும். இதற்கு நம்முடைய பொதுமொழியாக இந்தியை ஏற்றுக் கொண்டிருக்கிறோம். இந்தியாவிலுள்ள பல மொழிகளிலும் இந்தி பொதுவாக இந்தியாவிற்கே உரியதென்பதை இதன் பெயரமைதியே குறிக்கின்றது. பழைய காலத்தில் ஸமஸ்கிருதம் இந்தியாவின் பொது மொழியாக இருந்ததென்று சில பழைய நூல்களால் அறியக்கிடக் கின்றது"

என்று சென்ற மார்ச்சுத் திங்கள் 29-ம் நாள் மாம்பலத்தில் கூடிய பாரதிய சாகித்ய பரிஷத்தில் வரவேற்புத் தலைவராக விருந்த மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் கூறினார்கள். அவர்கள் தமிழர் சார்பாகவே இவ்வாறு மொழிந் திருக்கவேண்டும் என நம்புகிறோம். பண்டைக்காலத்தில் ஸமஸ் கிருதம் இந்தியாவிற்குப் பொதுமொழியாக இருந்தமைக்குச் சில ஆதாரங்களை அவர்கள் குறித்திருந்தால் நலமாக இருந்திருக்கும். அவர்கள் கூறியவாறு சமஸ்கிருதம் பொதுமொழியாக இருந்த அளவிற்கே இன்று ஹிந்தி பொதுமொழியாக அமையவேண்டும் என்று ஐயர் அவர்கள் கருதியிருந்தால் அதற்குத் தமிழர்களும் உடன் படுவார்களென்றே நம்புகிறோம். ஆனால் தமிழ் மாணவர்களுக் கெல்லாம் இந்தியைக் கட்டாய பாடமாக அமைக்கவேண்டும்; தமிழ் நூல்களைக்கூட இந்தியில் மொழிபெயர்த்துப் படித்தால் அதன் நலம் சிறந்து விளங்கும் என்றெல்லாம் கூறி இந்திமொழியைப் பரப்ப முயல்வதைக் கண்டியாமலிருக்கமுடியாது. இதுவே தமிழ் மக்களின் உள்ளப்பான்மையாகும் என்று துணிந்து கூறலாம்,

மிகவுங் குறைந்தவிலைப் பதிப்பு! வெளிவந்துவிட்டது!!

# திருக்குறள் பரிமேலழகருரை

இதன்கண் அராய்ச்சி முன்னுரையும், பிற்சேர்க்கையாகத் திருக்குறட்பாயிரக் கருத்து, சில குறட்பாக்களுக்கு ஏனைய உரையாசிரியர் உரையும் விளக்கமும், அருஞ்சொற் பொருளகராதி, திருவள்ளுவமாலை பொழிப்புரை முதலியனவும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

திருக்குறள்: அறத்தினை உணரத் தலைப்படுவோர்க்கு ஒரு பேரற நூல்; அரசியலை யறிய விரும்புவார்க்கு ஓர் அரசியல் நூல்; ஞானத்தை விரும்புவார்க்கு ஒரு ஞான நூல்; கவிச்சுவை விரும்புவார்க்கு ஒரு காவியம்; காமச்சுவை விரும்புவார்க்கு ஒரு காமநூல்; பேரின்பம் விரும்புவார்க்கு ஒரு பேரின்ப நூல்; வாழ்க்கை நெறி யறிய விரும்புவார்ச்கு ஒரு வாழ்க்கை வழிகாட்டு நூல்.

இஃது உலகப் பொதுநூல்: உலக மக்கட்கு வாழ்க்கைச் சட்ட நூல். இதன் அளப்பிலா பெருமையினாலேயே இதனை இலத்தீன், கிரீக், பிரஞ்சு, ஜெர்மன், ஆங்கிலம் முதலிய மேனாட்டு மொழிகளிலும், தெலுங்கு, மலையாளம் சம்ஸ்கிருதம், ஹிந்தி முதலிய உள்நாட்டு மொழிகளிலும் மொழிபெயர்த்து, சாதி சமய நாடு மொழி வேற்றுமைகளின்றி எல்லா மக்களும் தங்கள் கண்ணெனப் போற்றி வருகின்றனர்.

பரிமேலழகருரையைத் திருத்தமாகப் படிப்பவர் உயர்ந்த புலமையும், திருந்திய உரைநடை எழுதுந் திறமையும் நன்கு பெறுவர் என்பது கண்கூடு.

நூற்சிறப்பு உரைச்சிறப்புகட்கேற்ப இதுகாறும் திருக்குறள் பரிமேலழகர் உரைப் பதிப்பு இத்தகைய கையடக்கமான அளவில், இயன்றவரை பெரிய எழுத்துக்களில், கண்கவரும் உயர்ந்த கட்டடமுடையதாய், இவ்வளவு குறைந்த விலைக்கு யாராலும் பதித்துக் கொடுக்கப் பெறவில்லை என்பது இதனைப் பார்ப்பவர் நன்கு அறிவர்.

குறிப்பு:—இவ்வுரையில் ஒருவர் எத்தனை பதிப்புக்களை வைத்திருப்பினும் இப்பதிப்பினைப் பார்ப்பின் இதனை வாங்காமலிரார் என்பது திண்ணம்! திண்ணம்!! திண்ணம்!!!

| | ரூ. | அ. |
|---|---|---|
| வள்ளுவர் வண்ணப்படம் தாங்கிய பொன்னெழுத்திட்ட கலிக்காக் கட்டடமுடைய பிரதி ஒன்றுக்குக் குறைந்தவிலை | 1 | 14 |
| மூன்று பிரதிகட்குக் குறைந்த விலை | 5 | 0 |
| ரெக்சைன் கட்டடமுடைய பொன்மயமான பரிசுப் பதிப்பு ,, | 3 | 8 |

"தமிழன்"

ஆசிரியர் உயர்திரு. P. சிதம்பரம் பிள்ளை பி.ஏ.,பி. எல்., எம். எல். ஏ. இயற்றிய நூல்கள்

| | | ரூ | அ. | பை |
|---|---|---|---|---|
| Dravidian and Aryan | English | 0 | 12 | 0 |
| The right of Temple Entry | ,, | 1 | 0 | 0 |
| ஆலயப் பிரவேச உரிமை (தமிழ்மொழி பெயர்ப்பு—முதல் பாகம்) | | 0 | 5 | 0 |

தலைமை நிலையம்: திருநெல்வேலி. } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 6, பவளக்காரத்தெரு, சென்னை.

Reg. No. M. 1725 March—April 1937



Printed by Mr. C. M. Govindarajan, at the The Progressive Printers, Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah for The S. I. S. S. W. P. Society, Tinnevelly,